# ஆயிர ஆரத்து ஆழியன் ஆயிர நாமம்

## (ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம் - பொருள் விளக்கம்)




தொகுப்பாசிரியர்: **A. திருமலை**

பதிப்பாசிரியர்: **Dr. A. நாகலிங்கம்**



**நம்மாழ்வார் பதிப்பகம்**

'ஆழ்வார் இல்லம்', 27, 2வது பள்ளிக்கூடத் தெரு,

பட்டாபிராம், சென்னை-600 072.

ஸ்ரீ ராமஜயம்

# ஆயிர ஆரத்து ஆழியன் ஆயிர நாமம்

(ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம் — பொருள் விளக்கம்)



தொகுப்பாசிரியர் : **A. திருமலை**

பதிப்பாசிரியர் : **Dr. A. நாகலிங்கம்**

**நம்மாழ்வார் பதிப்பகம்**
'ஆழ்வார் இல்லம்',
27, 2வது பள்ளிக்கூடத் தெரு,
பட்டாபிராம், சென்னை - 600 072.

(இலவச வெளியீடு)

## நூல் விவரம் / Bibliographical Data

**ஆயிர ஆரத்து ஆழியன் ஆயிர நாமம்**

(ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம் — பொருள் விளக்கம்)

Aayira Aaraththu Aahiyan Aayira Naamam

(Sri Vishnu Sahasra Naamam with explanation)

தொகுப்பாசிரியர்: **A. திருமலை**

Compiler **A. THIRUMALAI**

Scientist 'D', (Rtd.),
Asst. Director, CVRDE, Min. of Defence,
Avadi, Chennai - 600 054.

பதிப்பாசிரியர் : **டாக்டர் அ. நாகலிங்கம்,** எம்.ஏ.,பிஎச்.டி.,

Editor Dr. **A. NAGALINGAM,** M.A.,Ph.D.,

Prof. of Tamil (Rtd.), DRBCCC Hindu College,
Pattabiram, Chennai - 600 072.

முதல் பதிப்பு / First Edition : 2011

பக்கம் / Pages : 128

வெளியீட்டாளர் : **நம்மாழ்வார் பதிப்பகம்**

Publisher **'ஆழ்வார் இல்லம்',**
**27, 2வது பள்ளிக்கூடத் தெரு,**
**பட்டாபிராம், சென்னை - 600 072.**

**Nammalwar Pathippagam,**
'Alwar Illam', 27, II School Street,
Pattabiram, Chennai - 600 072.

அச்சகம் : **ஆர் என் ஆர் அச்சகம்,**
**19, தாண்டவராயன் தெரு,**
**திருவல்லிக்கேணி, சென்னை-600 005.**

Printed at : RNR Printers & Publishers,
19, Thandavarayan Street,
Triplicane, Chennai - 600 005.

# பொருளடக்கம்



—oOo—

## பதிப்புரை

'தமிழ்த் தென்றல் திரு.வி.கலியாணசுந்தரனார்' பற்றிச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆய்வு செய்து 1975-ல் டாக்டர் பட்டம் பெற்றவன் நான். பட்டாபிராம் இந்துக் கல்லூரியில் 05.07.1976-ல் பயிற்றுநராகப் பணியில் (Tutor) சேர்ந்தேன்; தமிழ்ப் பேராசிரியர் மற்றும் துறைத் தலைவராக 30.06.2003-ல் (27 ஆண்டுகள்) கல்லூரிப் பணியிலிருந்து ஓய்வு பெற்றேன்; ஓய்வில் 8 ஆண்டுகள் ஓடிவிட்டன.

என் கடந்தகால வாழ்க்கை, மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தலிலும், நூல்களைப் படிப்பதிலும், கட்டுரைகள் எழுதுவதிலும், நூல்களைத் தயாரிப்பதிலும், அறிஞர்களுக்கும் சைவ, வைணவ அமைப்புகளுக்கும் நூல் வெளியீடுகளில் துணை செய்வதிலும் கழிந்தன. 1984-85-ல் கல்லூரி ஆண்டு மலர் 'ஆழ்வார் அச்சக'த்தின் வழி வெளியானது. மலரின் பதிப்பாசிரியர் என்ற நிலையில், அச்சக உரிமையாளர் திரு. தி. சடகோபன் அவர்களின் தந்தையார் திருமிகு. ஆ. திருமலை ஐயங்கார் அவர்கள் தொடர்பு-கேண்மை அப்போது எனக்குக் கிடைத்தது. என் பதிப்பாசிரியப் பணியினைக் கண்ட அவர்கள், தம்முடைய நூல் வெளியீடுகளுக்குத் துணை செய்யுமாறு என்னைக் கேட்டுக் கொண்டார். அவருடைய அன்புக்கு இசைந்தேன்; 'நம்மாழ்வார் பதிப்பக' வெளியீடுகளுக்கு எல்லாம் துணை நின்றேன்.

இப்போது அவருடைய (முத்துவிழா-80வயது நிறைந்த வைணவப் பெரியார்) 'ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம' நூல் வெளியீட்டுப் பணியில் ஈடுபட்டுள்ளேன். இப்பணி, 2000-ம் வருட முதல் சிறுகச் சிறுக நடைபெற்று, கடந்த எட்டு மாதங்களாகத் தீவிரமடைந்து 2011-ல் நூலாக வெளிவருகிறது.

இந்நூலின் தொகுப்பாசிரியர் திருமிகு. திருமலை அவர்கள் தொகுத்த ஸஹஸ்ர நாமத்தின் பொருள், திவ்விய பிரபந்தத் தொடர், அரும்பதப் பொருள், திவ்விய தேச பெருமாள் பெயர் ஆகியவற்றைச் சரிபார்த்தேன். அப்பொழுது ஏற்பட்ட

இடர்ப்பாடுகளை இருவரும் பரிமாற்றம் செய்து ஒருமுடிவுக்கு வந்தோம். நாமச் சொற்களைப் பிரித்து அமைத்தால், எளிதில் பொருள்புரிந்து மூலச்சொற்கள் மனத்தில் பதிய ஏதுவாகும் என்று அங்ஙனம் செய்தோம் சிற்சில இடங்களில்.

ஒரு நாமமே மீண்டும் வரும்போது பொருள் வேறுபடுகிறது. அதைத் தேர்ந்தெடுப்பதில் மிகுந்த கவனம் தேவைப்படுகிறது. உதாரணமாக: 'நிவ்ருத்தாத்மா' என்னும் பெயர் 4 இடங்களில் வருகிறது (நாமத் தொடர் எண் 231, 453, 604, 780). இதன் நான்கு விதமான பொருள்கள் வருமாறு:- எல்லாவற்றையும் கடந்தவன் (231); துறந்து இருப்பவன் (453); நிவர்த்தனின் சுவாமி (நிவர்த்தன் - துறவி) (604); கருணையால் உலகத்தோடு சேர்ந்து இருந்தாலும் ஒன்றிலும் ஒட்டாத தனித்த மனம் உடையவன் (780).

இந்த நாமங்களையும், பொருளையும், மேற்கோளையும், சில நாமங்களுக்கு 'ஹ' ஒலிக் குறியையும் (:), தேர்ந்து தெளிவதில் நேரம் அதிகம் செலவாயிற்று. இந்நாமங்களை வரிசை எண்களுடன் பத்தி (Para) போன்று ஒன்றன்பின் ஒன்றாக எழுதிப் பலமுறை திருத்தம் செய்தோம். இவை யாவற்றையும், தம் முதுமையை ஒருபொருட்டாக எண்ணாமல் கண்ணபெருமானிடம் கொண்ட எல்லையற்ற பக்தியின் காரணமாக எழுதியவர் தொகுப்பாசிரியர் திருமிகு. A. திருமலை அவர்களே!

தொகுப்பாசிரியரின் பேருழைப்பு, இன்று ஓர் அழகிய உயர்ந்த நூலாக உருப்பெற்றுள்ளது, அந்த நாராயணனின் திருவருளாலேயே ஆகும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த ஒரு தெய்வீக நூலைத் தமிழ் அன்பர்கள் படித்துப் பயன்பெற வேண்டுகிறேன்.

அ. நாகலிங்கம்

'ஜயா - பச்சையப்பர் இல்லம்',
3, பேராசிரியர் தெரு, சோழன் நகர்,
பட்டாபிராம், சென்னை-72.
01.07.2011

# முன்னுரை

இந்திய பாதுகாப்புத் துறையில் முப்பத்து மூன்றரை ஆண்டுகள் பணிபுரிந்தவன் அடியேன். கடைசி ஆறு ஆண்டுகள் சென்னை ஆவடியில் உள்ள போர் ஊர்தி ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி நிறுவனத்தில் (C.V.R.D.E.) துணை இயக்குநராகப் பணியாற்றி 1988-ல் ஓய்வு பெற்றேன். பிரிவு உபசாரத்தன்று சக ஊழியர்களால் அன்பளிப்பாக வழங்கப்பட்ட பொருள்களுள் வால்மீகி இராமாயணத் தமிழாக்கமும், நாலாயிர திவ்யப் பிரபந்தமும் குறிப்பிடத் தக்கவை.

அடியேன் வசம் தகப்பனார் படித்த திவ்யப்பிரபந்தம், பகவத் கீதை, ஆறாயிரப்படி, குருபரம்பரா ப்ரபாவம், ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம தமிழ் அனுவாதம் முதலிய பல நூல்கள் இருந்தன. மேலும் சில ஆன்மீக நூல்களை அவ்வப்பொழுது வாங்கினேன். இவற்றை ஓய்வு நாட்களில் படித்து இறை அனுபவத்தில் திளைக்க இந்நூல்கள் எனக்குப் பேருதவியாக இருந்தன.

இந்நிலையில் என் உறவினர் ஓய்வுபெற்ற 'நல்லாசிரியர்' ஒக்கூர் திரு.சி.ஜகந்நாதன், எம்.ஏ.,பி.எட்., அவர்கள் திவ்யப் பிரபந்தத்திலிருந்து திருவேங்கடவன் பெருமைகள் காணப்படும் பதங்களைத் தொகுத்த 'கோவிந்த நாமாவளி'யின் அச்சடிக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தார். நானும் டாக்டர் அ.நாகலிங்கம் அவர்களும், திவ்யப்பிரபந்தத் துணையோடு சிற்சில திருத்தங்களுடன் நாமாவளியை அகர வரிசைப் படுத்தினோம். ஓய்வுபெற்ற தமிழ்ப் பேராசிரியரும் வைஷ்ணவ உலகில் 'சொல்லழகர்' என்று போற்றப்பட்டவரும் ஆகிய டாக்டர்.கே.ஏ. மணவாளன் அவர்கள் இதனை மேற் பார்வையிட்டார். பின்னர் இது 'அருளிச்செயலில் கோவிந்த நாமாவளி' என்னும் பெயரில் 'நம்மாழ்வார் பதிப்பக' வெளியீடாக 10,000 பிரதிகளுடன் அடியேனால் வெளியிடப்பட்டது. இந்நூல் ஸ்ரீமத் ஸ்ரீஸீதாராம ஸ்வாமிகளால் ஸ்ரீஸ்ரீநிவாஸ நிகேதனத்தில் (நுங்கம்பாக்கம், சென்னை), 22.09.1991-ல் வெளியிடப்பட்டது.

11.02.1993-ல் 'ஆழ்வார்கள் அருளிச்செயலில் திருக்கோட்டியூர்' என்னும் நூல், அவ்வூர்க்கோயில் மஹாசம்ப்ரோக்ஷண மஹோத்ஸவ தின நினைவு மலராக,

'நம்மாழ்வார் பதிப்பக'த்தின் வழி 1000 பிரதிகள் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

1999 நவம்பரில் "108 ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேச பெருமாள் சரணாகதி நாமாவளி"யை ஓர் அட்டவணையாக நம்மாழ்வார் பதிப்பகம் 4000 பிரதிகள் வெளியிட்டது.

இவ்வெளியீடுகள் அனைத்தும் ஆஸ்திக பெருமக்களின் பேருதவியினால் அச்சிடப்பட்டு இலவசமாக வழங்கப்பட்டன.

இவ்விதம் பகவத் விஷயங்களில் நான் ஈடுபட்டுவரும் நாள்களில் ஒருநாள் (பிரமாதி ஆண்டு, தை அமாவாசை, சனிக்கிழமை, திருவோண நக்ஷத்திரம், 05.02.2000) வழக்கம்போல் ஸ்ரீராமபிரான் பட்டாபிஷேகப் படத்தின் முன் அமர்ந்து நாலாயிர திவ்யப்பிரபந்த பாசுரங்களை சேவித்து (ஓதி)க் கொண்டிருந்தேன். அப்பொழுது என்னையும் அறியாமல் மனத்தில் ஓர் உணர்வு மின்னல்போல் தோன்றியது. அது "ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு தமிழ் உரை ஒன்றை தொகுத்து எழுது" என்பதே.

'நன்றே செய்; நன்றும் இன்றே செய்' என்பது முதுமொழி. நம்மாழ்வார் "மின்னின் நிலை இல மன் உயிர் ஆக்கைகள்; என்னும் இடத்து இறை உன்னுமின் நீரே" (திருவாய்மொழி 1.2.2) என்று கூறி உள்ளதை நினைவிற்கொண்டு ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு உரை தொகுப்பதை மேற்கொண்டேன்.

ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு ஸ்ரீஆதிசங்கரரும், ஸ்ரீபராசரபட்டரும் ஸ்ரீராகவேந்திரரும் பாஷ்யங்கள் (பேருரை) இயற்றி உள்ளார்கள். இவற்றைத் தழுவி பல சான்றோர்கள் தமிழிலும், ஆங்கிலத்திலும் உரை விளக்கம் செய்துள்ளார்கள். அவற்றுள் அடியேன் வசம் இருந்த ஒரு சிலவற்றை பயன்படுத்திக் கொண்டேன்.

அத்தருணத்தில் என் பணியை அறிந்த கல்பகம் என்னும் மூதாட்டி ஒரு ஆங்கிலமாத வெளியீட்டில் இருந்த ஸஹஸ்ரநாமப் பகுதிகளின் நகல் ஒன்றையும் ரூ. 500/-க்கு ஒரு காசோலையையும், பக்தர் ஒருவருக்கான அறிமுகக் கடிதத்தையும்

ஆசி கூறி அனுப்பி வைத்தார்கள். இவ்வாறு இப்பணியை நான் தொடர்ந்து செய்து முடிக்கும் சூழ்நிலை இறைவன் அருளால் உருவாயிற்று.

துணை நூல்கள் ஒவ்வொன்றும் காலப்போக்கில் கிடைக்கலாயின. ஸஹஸ்ர நாமத்தை தொகுத்து எழுதுவதில் ஒருமுறையைப் பின்பற்ற வேண்டியதாயிற்று. நாமாக்களுக்கு சொற்பொருள் கொடுப்பதுமல்லாமல் நாலாயிர திவ்ய பிரபந்தத்திலிருந்து பொருத்தமான சொற்றொடர்கள் / பாசுர அடிகள் கொடுக்க விரும்பினேன். அவற்றில் வரும் அரும்பதங்களுக்கு அர்த்தம் கொடுக்க, பிரபந்த ரக்ஷைகளையும், தமிழ் அகராதிகளையும் உதவியாகக் கொண்டேன். என்னுடைய அருமை நண்பர் டாக்டர் அ.நாகலிங்கம் அவர்களின் பேருதவியும் இச்செயலில் அவசியமாயிற்று.

இப்பணி நடந்துகொண்டிருக்கையில் எதிர்பாராதவகையில் 2002 ஜூலை 15 அன்று ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீவரத எதிராஜ ஜீயர் சுவாமிகள் அடியேன் குடிலுக்கு எழுந்தருளி ஆசீர்வதித்தார்கள். அப்பொழுது அடியேனும் டாக்டர் அ.நாகலிங்கமும் இணைந்து செயல்படும் இந்நூல் இனிதே வெளிவர ஜீயர் சுவாமிகள் தம் கைப்பட எழுதி மங்களாசாஸனம் அருளினார்கள். (இவ் அருளுரை நூலில் தனியாக இடம் பெற்றுள்ளது.)

நிவ்ருத்தி தர்மமாக (நம் முயற்சி அல்லாமல் இறைவன் அருளால் நிறைவேறல்) இந்நூல் 2011-ல் நிறைவுபெற்றது எம்பெருமான் கடாக்ஷமே.

விஷ்ணு என்னும் வடமொழிச் சொல்லிற்கு, அமுதத் தமிழில் திருமால், ஆழியன், ஆழியான், சக்கரதாரி, சக்கரபாணி என்று பல பெயர்கள் உண்டு. திருமால் வலக்கையில் கொண்டிருக்கும் சக்கர ஆயுதம் போன்று அவன் திருவடியிலும் சக்கர முத்திரை பொறிக்கப்பட்டு உள்ளது என்பதை ஒரே பதத்தில், "ஆயிரவாரத்தாழியன்" அதாவது 'திருவடியில் ஆயிர வரிகொண்ட சக்கரத்தை உடையவன்' என்று தமிழ்நாடு பாடநூல் நிறுவனம் வெளியிட்ட தமிழ்-தமிழ் அகர முதலியில் கண்டேன். 'ஆயிரவாரத்தாழியன்' என்னும் ஒரே பதத்தை பிரித்தால், 'ஆயிர

ஆரத்து ஆழியன்' என்பது புலப்படும். ஆரம் என்பது, ஒரு வட்டவடிவமான உருளையின் (தேர்ச் சக்கரம்) ஆரைக்கால் பழு (சட்டம்) ஆகும்.

கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரியாழ்வார் இதனை முன்னரே,

"ஒரு காலிற் சங்கு ஒரு காலிற் சக்கரம்
உள்ளபடி பொறித்து அமைந்த
இருகாலும் கொண்டு" - பெ.ஆ.தி. 1.7.6

என்று பாடியுள்ளார். கீழ்க்காணும் வரைபடம் ஆயிர ஆரத்து ஆழியை நன்கு விளக்கக் காணலாம்.




ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம வரிசை எண் 698-ல் 'வஸுப்ரத:' என்பதற்குப் பொருள் தன்னையே செல்வமாகத் தருபவன் என்பதுபோல் விஷ்ணு ஸஹஸ்ரநாம தமிழ் நூலுக்கு 'ஆயிர ஆரத்து ஆழியன் ஆயிர நாமம்' என்று சூட்டப்பட வேண்டிய திருப்பெயரை, தமிழ் அகர முதலி வாயிலாக அடியேனுக்கு உணர்த்தியது அவ் ஆழியானின் கிருபையே! இங்கு "என்னைத் தன்னாக்கி, என்னால் தன்னை இன் தமிழ் பாடிய ஈசனை" (திருவாய்மொழி 7.9.1) என்னும் நம்மாழ்வார் பாசுரம் நினைவுக்கு வருகிறது.

ஆழ்ந்த பொருளுடனும் கருத்துச் செறிவுடனும் கூடிய இந்நூல் ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

I **நூல் அறிமுகம் :** இப்பகுதி, 'ஸஹஸ்ர நாமம்' என்றால் என்ன, அது எதனைக் குறிக்கும், அதன் தோற்ற வரலாறு, நாமப்பெருமை, சங்க நூல் கருத்து, ஆழ்வாராதிகளின் ஸஹஸ்ரநாமம் பற்றிய பாசுரங்கள் ஆகியவற்றைக் கொண்டுள்ளன.

II **மூலம் :** இதில் மூன்று உட்பிரிவுகள் உள்ளன. அவை:-

(i) அனுஷ்டானத்தில் (பழக்கம்) உள்ளவை; ஆயினும் மஹாபாரதத்தில் இல்லாதவை (6 சுலோகங்கள்).

(ii) மஹாபாரத்திலும் பாஷ்யங்களிலும் உள்ளவை (13 சுலோகங்கள்).

(iii) அனுஷ்டானத்தில் உள்ளவை (மற்றைய சுலோகங்கள்).

இச்சுலோகங்கள் ஒவ்வொன்றிற்கும் பொருள் தரப்பட்டுள்ளது.

III **விஷ்ணு ஸஹஸ்ர நாம சுலோகங்களும் பலச்ருதியும் :** இப்பகுதியில், ஸஹஸ்ர நாம 107 சுலோகங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. பலச்ருதியில் உள்ள 22 சுலோகங்களுக்கும் அனுஷ்டானத்தில் உள்ள சுலோகங்களுக்கும் பொருள் தரப்பட்டுள்ளன.

IV **நாமமும் பொருள் விளக்கமும் :** இதில், பல பொருள்கள் உள்ள ஒரு நாமத்திற்கு ஒரே ஒரு பொருளையும், அதற்குப் பொருத்தமான நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் காணப்படும் சொற்றொடர்களும் / பாசுர அடிகளும் அவற்றில் வரும் அரும் பதங்களுக்கு அர்த்தமும் தரப்பட்டுள்ளன. மேலும் அந்தந்த நாமத்துக்குப் பொருத்தமான திவ்யதேசங்களின் பெயரும் அங்கு எழுந்தருளியுள்ள பெருமாளின் பெயரும் சேர்க்கப்பட்டுள்ளன.

V **நாம அகராதி :** இந்நிறைவுப் பகுதியில், வாசகர்கள் நாமங்களைப் பொருளுடன் அறிந்துகொள்ள 'நாம அகராதி' அகர வரிசைப் பிரகாரம் அச்சிட்டு தொடர் எண்ணுடன் தரப்பட்டுள்ளது. (இவ் அகராதி, அடியார்கள் தத்தம் மழலைச் செல்வங்களுக்கு பெயர் சூட்டுவதற்கு உதவியாக இருக்கும்.)

திருமங்கையாழ்வார், தம் பெரிய திருமொழியில் (1.2.9),

"ஓதி ஆயிரம் நாமங்கள் உணர்ந்தவர்க்கு
உறு துயர் அடையாமல்,
ஏதம் இன்றி நின்று அருளும் நம் பெருந்தகை"

என்று பாடியுள்ளார் (ஏதம்-துன்பம்). அத்தகைய ஆயிர நாமங்களைக் கொண்ட சுலோகங்களும், அவற்றில் உள்ள நாமம் ஒவ்வொன்றுக்குப் பொருளும் மற்ற விளக்கங்களும் பெற்றுள்ளது இந்நூல். இது, படிப்போருக்கு பக்தி சிரத்தையை மேன்மேலும் ஊட்டும் என்பதில் ஐயம் இல்லை. மேலும், ஆழ்வார்களின் அமுதத் தமிழாம் நாலாயிர திவ்ய பிரபந்த பாசுரங்களைப் படித்து அனுபவிப்பதற்கு ஒரு வேட்கையை (பற்றுள்ளம், விருப்பு) உண்டாக்கும். அன்றியும், எம்பெருமான் எழுந்தருளியுள்ள திவ்யதேசங்களைத் தரிசிக்கும் ஆர்வத்தையும் தூண்டும். அவற்றுடன் அவன் நாம மகிமையை எண்ணி எண்ணி இன்புறவும் செய்யும்.

இந்நூல் கிடைக்கப்பெறும் அன்பர்கள் தாங்கள் படித்து அனுபவித்து, பின்னர் பிறருக்கும் கொடுத்துப் படிக்கச் செய்து ஞானவேள்வியில் ஈடுபட்டு இறை அருளில் திளைக்க வேண்டுகிறேன்.

அடியார்கள் மற்றும் தர்ம ஸ்தாபனங்களிடமிருந்து நன்கொடைகள் பெற்று அதன்வழி ஒரு இலவச வெளியீடாக இந்நூல் வெளியிடப்படுகிறது. இது ஸஹஸ்ரநாம பாராயணம் செய்யும் சிறுவர்களுக்கும், வழிபாட்டு ஸத்ஸங்கங்களுக்கும், நூல் நிலையங்களுக்கும் வழங்கப்படும். ஆர்வம் உடையோர் 'நம்மாழ்வார் பதிப்பகத்'துடன் நேரில் தொடர்புகொள்ள வேண்டுகிறேன்.

'குற்றம் களைந்து வாசித்தல் கற்றறிந்த மாந்தர் கடன்' என்ற அறமொழி நின்று, இந்நூலில் குற்றம் குறைகள் இருப்பின், அவற்றை அடியார்கள் திருத்திப் படிக்கும்படி பணிவுடன் வேண்டுகிறேன்.

இந்நூலை வெளியிடும் பணியில் பெற்ற தாயைப்போல் உற்ற துணையாயும் ஆக்கபூர்வமான அனைத்து செயல்களுக்கும்

கலங்கரை விளக்குப்போல் பதிப்பாசிரியர் பொறுப்பேற்று நின்ற பட்டாபிராம் இந்துக் கல்லூரியில் பணியாற்றி ஓய்வுபெற்ற தமிழ்ப் பேராசிரியர் Dr.A.நாகலிங்கம், எம்.ஏ.,பிஎச்.டி. மற்றும் அவர் துணைவியார் திருமதி நா.கலையரசி, எம்.ஏ.,பி.எட். அவர்கட்கும் என் மனப்பூர்வமான வாழ்த்துக்கள்.

இந்நூலை, தொகுக்கும் காலத்திலேயே மங்களாசாஸனம் வழங்கிச் சிறப்பித்த ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீவரத எதிராஜ ஜீயர் சுவாமி அவர்களுக்கு க்ருதஜ்ஞதை (செய்நன்றி அறிகை) பூர்வமான ப்ரமாணங்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஆசியுரை வழங்கிய ஸ்ரீகோவிந்த உபாசகர் பகவன் ஸ்ரீமத் ஸ்ரீ ஸீதாராம ஸ்வாமி அவர்களுக்கு அநந்தகோடி நமஸ்காரம்.

இந்நூலுக்கு அணிந்துரை நல்கிய சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'வைணவ உரை வளம்' என்னும் பொருளில் ஆய்வுரை எழுதி டாக்டர் பட்டம் பெற்று, பின் அதை நூலாக வெளியிட்டவரும் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியின் முன்னாள் பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவரும் ஆகிய முனைவர் தெ.ஞானசுந்தரம், M.A.,Ph.D. அவர்களுடைய சமய - இலக்கியப் பணிகள் மேன்மேலும் பொலிவதாக.

நன்கொடை வழங்கிய அடியார்கள், தர்ம ஸ்தாபனங்கள், நூலை ஒளி அச்சு செய்துகொடுத்த சென்னை-72, பட்டாபிராம், ஆழ்வார் பிரிண்டர்ஸின் நிர்வாகி, நல்லமுறையில் அச்சிட்டுத் தந்த ஆர் என் ஆர் பிரிண்டர்ஸ் (சென்னை-5) உரிமையாளர் மற்றும் சிறப்புற நூலை வெளியீடு செய்யப் பல்வகையிலும் உதவி வழங்கிய ஏனையோர்க்கும் என் மனமார்ந்த நன்றி.

'ஆழ்வார் இல்லம்',
27, 2வது பள்ளிக்கூடத் தெரு,
பட்டாபிராம், சென்னை-72,
☎ 044 - 2685 1122
05.06.2011.

தாஸன்,
A. திருமலை

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# மங்களாசாஸனம்

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி

**ஸ்ரீ வரத எதிராஜ ஜீயர்,**

ஸ்ரீபெரும்பூதூர்.

ஸ்ரீ உ.வே. பெருங்கருணை ஆ. திருமலை அய்யங்கார் திருமாளிகைக்கு இன்று சித்ரபானு ஷு ஆனி மீ உத்திர நக்ஷத்திரத்தில் விடைகொண்டது எந்தை எதிராஜன் பணித்தபடியாம்.

உற்சாகமாக அவரது திருமாளிகைக்கு வழிகாட்டி உடன் வந்தவர் ஆந்மீய தடாகத்தில் மத வேறுபாடு காணாதவர் - ஹிந்துக் கல்லூரி தமிழ் பிரிவு தலைமைப் பேராசிரியர் ஸ்ரீமாந் நாகலிங்கம் அவர்களே தாமரைபூத்த தடாகமாக செயல்பட்டார்.

வடமொழியும் தென்மொழியும் பின்னிப் பிணைத்து இருவரும் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமாகட்கு தெளிவான எளிமையான தமிழ் உரை எழுத ஆரம்பித்து அநேக(மாக) முடியும் தருணத்தில் இருப்பதைக் கண்டு எந்தை எதிராஜனின் இன்னருளால் இது முடிவு பெற்று தமிழ்கூறும் நல்லுலகம் வியக்க வெளிவந்து தீக்காடாய் அழிந்து வரும் மானிடச் சோலையை பூக்காடாய் மணக்க வைக்கும் என்பது திண்ணம்.

நாள்: 15.7.2002

**ஸ்ரீ வரத எதிராஜ ஜீயர்**

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆசியுரை

ஸ்ரீ கோவிந்த உபாசகர்

## ஸ்ரீமத் ஸ்ரீ ஸீதாராம ஸ்வாமிகள்

ஸ்ரீ ஸ்ரீநிவாஸ நிகேதனம், நுங்கம்பாக்கம், சென்னை-34.

"தோள்கள் ஆயிரத்தாய்! முடிகள் ஆயிரத்தாய்!
துணைமலர்க் கண்கள் ஆயிரத்தாய்!
தாள்கள் ஆயிரத்தாய்! பேர்கள் ஆயிரத்தாய்!
தமியனேன் பெரிய அப்பனே!"

ஸஹஸ்ர நாமத்தால் பகவானை கீர்த்தனம் செய்வதே இக்கலியுகத்தில் மானிடர்கள் ஆற்றவேண்டிய இன்றியமையாக் கடமையாகும்.

அவ்வகையில் நினைத்த காரியங்கள் கைகூட, மேற்கொண்ட பணிகள் சிறக்க, எதிர்கொள்ளும் பணிகள் நன்கு நிறைவுபெற, கிளர் ஒளியாய் திகழ்வது "ஆயிர ஆரத்து ஆழியன் ஆயிர நாமம்" என்னும் விஷ்ணு ஸஹஸ்ர நாம நூலாகும்.

ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு பொருளும், அதற்குரிய திவ்யதேசப் பிரபந்தத்தொடர், அரும்பதப் பொருள், திவ்யதேசப் பெருமாள் பெயர் இவைகள் சீராகவும் அழகாகவும் இணைக்கப்பட்ட அறத்தின் வடிவே அமுதத் தமிழ் வெளியீடாக வரும் "ஆயிர ஆரத்து ஆழியன் ஆயிர நாமம்" (விஷ்ணு ஸஹஸ்ரநாமம் - பொருள் விளக்கம்) என்னும் நூல்.

பல்லாண்டுகளாக அரும்பாடுபட்டு இந்நூலைத் தொகுத்த ஸ்ரீமாந். A. திருமலை அய்யங்கார், உடன் இருந்து உதவிய Dr.A.நாகலிங்கம், எம்.ஏ.,பிஎச்.டி. இருவரும் நம் பாராட்டுக்கு உரியவராவர்.

இப்பெருமை வாய்ந்த நூலைப் படிப்போர் எல்லோரும் அலர்மேல்மங்கா ஸமேத ஸ்ரீ ஸ்ரீநிவாஸப் பெருமாளின் அநுக்ரகத்தால் உடல் ஆரோக்கியமும், வளமான செல்வமும், தீர்க்க ஆயுளும், இதர ஸௌபாக்யங்களும் பெற்று திகழ்வாராக.

ஸர்வே ஜனா ஸுகிநோ பவந்து சமஸ்த சன்மங்களானி சந்து.

18.05.2011

ஸ்வாமி ஸ்ரீ ஸீதாராமன்

# அணிந்துரை

முனைவர் **தெ. ஞானசுந்தரம்,** எம்.ஏ., பிஎச்.டி.,
பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு),
பச்சையப்பன் கல்லூரி, சென்னை-600 030.

இறைவனை அடைவதற்குப் பல வழிகள் உண்டு. அவற்றுள் எல்லாம் எளிமையானது அவன் திருப்பெயரை ஓதுவது. இறைவனைக்காட்டிலும் அவன் திருப்பெயர் ஏற்றமுடையது. உகந்தருளின நிலங்களில் மேவும் பெருமானை நினைந்தவுடன் வழிபட இயலாது. அவ்விடங்களை நாடிச் செல்ல வேண்டும். அங்குள்ள பெருமானை எல்லாக் காலங்களிலும் கண்ணாரக் கண்டு வழிபட இயலாது; அங்கு வாசல் திறக்கும்வரை காத்திருக்க வேண்டும். எல்லாராலும் அவ்விடங்களுக்குச் செல்லவும் முடியாது; வசதியும் வலிமையும் உடையவர்களே செல்ல முடியும். ஆனால் இறைவன் திருப்பெயரை நினைந்தவுடனே சொல்லலாம். அதனைச் சொல்ல எந்த இடத்தையும் தேடிச் செல்ல வேண்டாம். இருந்த இடத்திலிருந்தே அதனைச் சொல்லலாம். இன்னபொழுதில்தான் சொல்ல வேண்டும் என்பதில்லை. எந்தப் பொழுதிலும் சொல்லலாம். யாரும் சொல்லலாம். தாயைக் கொல்பவன் கைசலித்தால் 'அம்மே' என்பதுபோல அவன் திருப்பெயரைச் சொல்வதற்குக் காலம் இடம் தகுதியுடையோர் என்னும் கட்டுப்பாடு ஏதுமில்லை. "இறைவன் கட்டிப்பொன்போலே; அவன் திருப்பெயர் பணிப்பொன் போலே" என்று கொண்டாடுவர் பெரியோர்.

திருப்பெயர் ஓதற்சிறப்பினைச் சதாநீகன் என்னும் அரசனது வரலாறு நன்கு உணர்த்துகிறது. அவன் பாண்டவர் குலத்தில் நாலு தலைமுறைக்குப்பின் தோன்றியவன். அவன் முடிசூடிச் சிறியதைப் பெரியது நலியாதவாறு நல்லாட்சி நடத்தினான். தன் குடிகள் மறுமையில் நற்பேறு பெறச் செய்யலாவது என்ன என்று நீள நினைந்தான். சௌநக முனிவனை நாடி, "ஐயனே, மண்ணுலக மக்கள் உடலினைப் பூண்கட்டிக் காப்பதிலேயே கருத்துடையராய்ப் பிறவிக்கடலில் ஆழ்கின்றார்கள். அவர்கள் கரைசேர வழி ஒன்றனைக் காட்டியருளிச்செய்ய வேண்டும்" என்றான். அதற்கு அவர், "இதுவோ கலிகாலம்; மக்களோ தீவினைகள் பல செய்தவர்களாய் இருக்கின்றனர். ஆதலால் இவர்கள் திருப்பெயர் ஓதுவதற்கன்றிப்

பிறிதொன்றனுக்குத் தகுதியானவர்கள் இல்லை; எல்லோரும் சொல்லற்குரிய திருப்பெயரை ஓதுதலே இவர்களின் ஈடேற்றத்திற்கு வழி" என்றார். அதனை மன்னனும் ஏற்று நடந்தான்.

ஆழ்வார்கள் இத்தகைய இறைவனின் திருப்பெயரைப் பெரிதும் போற்றினார்கள். தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருமாலை, திருமாலின் திருப்பெயரின் பெருமையைப் பறைசாற்றும் நூலாகும். அவர், "திருப்பெயர் சொல்வதால் உண்டாகும் இன்பத்தை விடுத்துத் திருநாட்டில் இருக்கும் இன்பமே கிடைத்தாலும் வேண்டேன்" என்று முழக்கமிட்டுள்ளார். (திருமாலை-2). அத்தகைய திருப்பெயர்,

"குலந்தரும்; செல்வந் தந்திடும்; அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரஞ் செய்யும்; நீள்விசும் பருளும்;
அருளொடு பெருநிலம் அளிக்கும்;
வலந் தரும்; மற்றுந் தந்திடும்; பெற்ற
தாயினும் ஆயின செய்யும்;
நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன் -
நாராய ணாஎன்னும் நாமம்" (பெரிய திருமொழி, 1:1:9)

என்கிறார் திருமங்கைமன்னன்.

திருமாலுக்கு எண்ணற்ற திருப்பெயர்கள் உண்டு. எண்ணிக்கையற்றதை ஆயிரம் என்று குறித்தல் மரபு. "தாள்கள் ஆயிரத்தாய் பேர்கள் ஆயிரத்தாய்" (திருவாய்மொழி, 8:1:10) என்கிறார் நம்மாழ்வார். அவரவர் தங்கள் தங்கள் தெய்வத்தைக் குறிக்கும் திருப்பெயர்களில் ஆயிரத்தைத் தொகுத்து அவற்றை மனமுருகிச் சொல்லிப் பேறு பெறத் தலைப்படுவர். திருமால் குறித்த ஆயிரம் பெயர்களை 'விஷ்ணு சகஸ்ர நாமம்' என்பர். அது வடமொழியில் அமைந்தது. அதனை நாள்தோறும் நவில்வோர் பலர். அவர்களுக்குப் பயன்படும் வகையில் திரு. A. திருமலை ஐயங்கார் அவர்கள் 'ஆயிர ஆரத்து ஆழியன் ஆயிர நாமம்' என்னும் தலைப்பில் ஓர் அழகிய நூலினை உருவாக்கியுள்ளார். அவரது இந்நூல் பல சிறப்புகளைக் கொண்டதாக அமைந்திருக்கிறது. மூலத்தோடு, விஷ்ணு ஸஹஸ்ர

நாம சுலோகங்கள், பொருள் விளக்கம், நாம அகராதி என்னும் பல பகுதிகளைக் கொண்டிலங்குகிறது.

இந்நூலில் முந்தி நிற்கும் மூன்று சிறப்புகள் கற்பவர் உள்ளத்தைக் கவரும்வகையில் அமைந்துள்ளன. முதலாவதாகச் சில திருப்பெயர்களுக்கு இணையாக அமைந்துள்ள ஆழ்வார்களின் பாசுரத் தொடர்களை அங்கங்கே காட்டியுள்ளமை தேனொடு பால் கலந்தாற்போல் சுவைகூட்டிச் சிந்தையை மகிழ்விக்கிறது. இதற்குச் சான்றாகக் கீழ்வருவனவற்றைக் காட்டலாம்:

64. மங்களம் பரம்:- மங்கள குணங்கள் நிறைந்தவன்; "உயர்வற உயர்நலம் உடையவன்" - திருவாய். 1.1.1.

73. மாதவ: - லக்ஷ்மி பதி; "திருமாமகள் கேள்வா" - திருவாய். 6.10.4.

167. ஸதாயோகீ: - எப்பொழுதும் விழித்து இருப்பவன்; "உறங்குவான்போல் யோகு செய்த பெருமான்" - திருவாய். 5.4.11.

206. அஜ: - பிறப்பு அற்றவன்; "பிறப்பிலி" - திருவாய். 3.5.6.

368. தாமோதர: - கயிற்றுத் தழும்பு வயிறன்; "கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்" - க.சி.தா. 1.

இரண்டாவதாக ஆயிர நாமங்களில் திருவிண்ணகரங்களில் எழுந்தருளியுள்ள பெருமாளின் பெயர்களாக வழங்குவனவற்றைச் சுட்டுவது சிறப்பாக அமைந்துள்ளது. இதற்குச் சான்றுகளாக அமைவன:

21. நாரஸிம்ஹ வபு: - நரசிங்க அவதாரன. (சிங்கவேள் குன்ற (அஹோபிலம்) திவ்யதேசப் பெருமாள் நரசிம்மர்.)

86. ஸுரேச: - விண்ணோர் பெருமான்; "தெய்வ நாயகன்". (திருவயிந்திர திவ்யதேசப் பெருமாள் தெய்வநாயகன்.)

198. பத்மநாப: - தாமரையைப் போன்ற சிவந்த கொப்பூழை உடையவன். (திருவனந்தபுரம் திவ்யதேசப் பெருமாள் அனந்த பத்மநாபன்.)

257. ஸுரேச்வர: - தேவர்கள் தலைவன். (தேரழுந்தூர் திவ்யதேசப் பெருமாள் தேவாதி ராஜன்.)

331. வரத: - வரங்களைத் தருபவன். (திருக்கச்சி - காஞ்சிபுரம் திவ்யதேசப் பெருமாள் வரதராஜன்.)

356. அதுல: ஒப்பு இல்லாதவன். (திருவிண்ணகர் திவ்யதேசப் பொருள் ஒப்பிலி அப்பன்.)

மூன்றாவதாக அங்கங்கே வைணவப் பெரியோர்கள் குறிக்கும் நயங்கள் சிலவற்றைக் குறிப்பிட்டுச் செல்வது நூலுக்கு மேலும் பொலிவினை நல்குகிறது.

"202. ஸிம்ஹ: - சீற்றமும் அருளும் ஒருங்கே அமைந்த சிங்கப்பிரான். (சிங்கம் யானைமேல் (ஹிரண்யன்) சீறினாலும் குட்டிக்கு (பிரகலாதன்) முலை உண்ணலாம்படி இருந்தவன் நரசிம்மன்) என்று விளக்கம் தந்துள்ளார்." இது பராசரபட்டரின் விளக்கம் ஒன்றினைத் தழுவி அமைந்ததாகும்.

"472. வத்ஸல: - பேரன்புடையவன்; சுவடுபட்ட இடத்தில் புல் மேயாத பசு தான் ஈன்ற கன்றின் மேல் உள்ள வழும்பை அன்புடன் நாக்கால் விலக்குவது தோஷத்தையும் (அழுக்கு) இனிதாகக்கொள்வது போன்றது அன்றோ" என்று தந்துள்ள விளக்கம் உரையாசிரியர்களால் வாத்சல்யம் என்னும் குணத்தினை விளக்கும்போது தெரிவித்துள்ளதாகும்.

திரு. A. திருமலை ஐயங்கார் அவர்கள் பாதுகாப்பு அமைச்சகத்தில் துணை இயக்குநராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். அவர் இப்பொழுது உயிர்க்குப் பாதுகாப்பான திருப்பெயர் ஆயிரத்தைப் பதிப்பித்துள்ளது மிகவும் பொருத்தமானதே. அவர் எந்நிலையில் நின்றாலும் நாரணன் தாள் மறவாத் தகைமையாளராகத் திகழ்ந்து வருகின்றார். திருமால் திருப்பெயர்களிலும், ஆழ்வார்களின் ஈரத்தமிழிலும் தோய்ந்து அவற்றைப் பரப்புவதனையே போதுபோக்காகக் கொண்டவர். வைணவத் திருவும் பொலிவும் மிக்க அவரது இந்த முயற்சி பாரட்டுதற்குரியது. இந்நூல் இன்றைய பதிப்புமுறையை யொட்டிச் சிறப்பாக வருவதற்குத் துணைநின்றுள்ள முனைவர் அ.நாகலிங்கம் அவர்களின் உதவியும் போற்றுதற்குரியது. இவ்விருவரின் நன்முயற்சியால் வெளிவரும் இந்நூலினை வைணவ உலகம் ஏற்றுப் போற்றிக் கொண்டாடும் என்பது உறுதி. வாழ்க திரு. திருமலை ஐயங்காரின் வைணவத் தொண்டு!

W-149, பூங்காச் சாலை, அன்பன்,
அண்ணா நகர் மேற்கு விரிவாக்கம், தெ. ஞானசுந்தரம்
சென்னை-101.
10.04.2011

# பயன்பட்ட நூல்கள்


(1) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் மூலமும் உரையும்
மொழிபெயர்ப்பு:— சதாவதானம்
ஸ்ரீ உ.வே. தி.ஈ. ஸ்ரீநிவாஸாசார்யர் ஸ்வாமி,
பதிப்பு:— ம.வீ.இராமானுஜாசாரியர், கும்பகோணம் 1919

(2) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் - தமிழ் மொழிபெயர்ப்பு
பதிப்பு:— அ. அனந்தாசாரி,
சுந்தரம் அச்சுக்கூடம், சென்னை. 1929

(3) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் - தமிழ் அனுவாதம்
ஸ்ரீ வே. நாராயணன், பதிப்பு: 6
ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், சென்னை. 1960

(4) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம வுரை பதிப்பு: 5
ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி
கிடைக்குமிடம்:— க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சி. 1975

(5) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் பதிப்பு: 6
உரை ஆசிரியர், "அண்ணா"
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை. 1984

(6) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் பதிப்பு: 2
கீழாத்தூர் ஸ்ரீநிவாஸாசாரியர் (தொகுப்பு) அச்சு : 4
தி.லிட்டில் ப்ளவர் கம்பெனி (LIFCO) சென்னை. 1996

(7) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் விளக்கவுரை பதிப்பு: 2
Dr. V.V. ராமாநுஜன்
ஸ்ரீரங்கப்ரியா பதிப்பகம், சென்னை. 2000

(8) ஆயிரம் நன்மை பயக்கும் அச்சுதனின் நாமங்கள்
ஸ்ரீ ஆராவமுத பார்த்தசாரதி,
Shree Prakash Cultural Heritage Research Centre, Chennai. 2000

(9) Thousand Ways to the Transcendental
VISHNU SAHASRANAMA Commentary by
Swami Chinmayananda, Madras. **1968**

(10) SRI VISHNU SAHASRANAMAM
Prof. A. Srinivasa Ragavan
Sri Visishtadvaita Prachar Sabha, Chennai. **1983**

(11) SRI VISHNU SAHASRANAMA STOTRAM
Swami Publishers (P) Ltd., Chennai.

(12) திவ்யப் பிரபந்தம் - நான்கு தொகுதிகள்
வெளியீடு: மர்ரே அண்டு கம்பெனி, சென்னை. **1955-56**

(13) பெரிய திருமொழி & திருவாய்மொழி: பிரபந்த ரக்ஷை உரை
ஸ்ரீ உத்தமூர். தி. வீரராகவாசார்யன்,
விசிஷ்டாத்வைத ப்ரசாரிணீ சபா, சென்னை. **1960**

(14) தமிழ் - தமிழ் அகரமுதலி
மு. சண்முகம் பிள்ளை,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை. **1985**

(15) 108 திவ்ய தேசங்களில் திருமால் திருஉருவங்கள்
டி.பி. இராமானுஜம்
வராகி பிரிண்டர்ஸ், சென்னை. **1995**

—oOo—

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| திருப்பல்லாண்டு | – | பல். |
| பெரியாழ்வார் திருமொழி | – | பெ.ஆ.தி. |
| திருப்பாவை | – | பாவை. |
| நாச்சியார் திருமொழி | – | நா.தி. |
| பெருமாள் திருமொழி | – | பெருமாள். |
| திருச்சந்த விருத்தம் | – | ச.வி. |
| திருமாலை | – | மாலை. |
| அமலன் ஆதிபிரான் | – | அ.ஆ.பி. |
| கண்ணிநுண் சிறுத்தாம்பு | – | க.சி.தா. |
| பெரிய திருமொழி | – | பெ.தி. |
| திருக்குறுந்தாண்டகம் | – | கு.தா. |
| திருநெடுந்தாண்டகம் | – | நெ.தா. |
| திருவாய்மொழி | – | திருவாய். |
| முதல் திருவந்தாதி | – | மு.தி.அ. |
| இரண்டாம் திருவந்தாதி | – | 2. தி.அ. |
| மூன்றாம் திருவந்தாதி | – | 3. தி.அ. |
| நான்காம் திருவந்தாதி | – | 4. தி.அ. |
| திருவிருத்தம் | – | விருத்தம். |
| திருவாசிரியம் | – | ஆசிரியம். |
| பெரிய திருவந்தாதி | – | பெ.தி.அ. |
| சிறிய திருமடல் | – | சி.மடல். |

—oOo—

# I. விஷ்ணு ஸஹஸ்ர நாமம் - ஓர் அறிமுகம்

## ஸஹஸ்ர நாமம்

ஆழ்வாராதிகளுள் நடுநாயகமாகத் திகழ்பவர் நம்மாழ்வார். அவர், மும்மூர்த்திகளுக்கு மேம்பட்ட பரம்பொருளைத் 'திருமால்' என்ற பெயராலேயே வழிபட்டவர். அப்பரம்பொருளான முழுமுதற்பொருள் வியாபகமுடையது; மங்களமுடையது. வியாபகமுடையது விஷ்ணு; மங்களமுடையது சிவம். இக்கருத்து, விஷ்ணு ஸஹஸ்ர நாமங்களிலும் (வரிசை எண் 2, 259, 663; 27, 607) காணப்படுகிறது. அத்தகைய பரம்பொருளுக்கு ஊர் பேர் ஒன்றும் இல்லை. ஒன்றுமில்லா ஒன்றுக்குப் பல பெயர்கள் உரைக்கப்படுகின்றன. ஒவ்வொரு பெயரும் அதன் தன்மையை உணர்த்துகிறது.

திருமாலின் திருப்பெயர்களையே 'ஸஹஸ்ர நாமம்' என்று வழங்குகிறோம். 'ஸஹஸ்ரம்' என்றால் 'ஆயிரம்' என்று பொருள். அதனால் திருமால் ஆயிரம் நாமங்கள் மட்டுமே கொண்டவன் என எண்ணலாகாது. "பல பலவே ஆபரணம், பேரும் பலபலவே" (திருவாய்மொழி. 2.5.6.) என்று நம்மாழ்வார் பாடிப் பரவியபடி, பல ஆயிர நாமங்கள் உடையவன் ஸ்ரீமந் நாராயணன். "தமர் உகந்தது எப்பேர் - மற்று அப்பேர்" (மு.தி.அ. 44) என்கிறபடியே அடியார்கள் தனக்கு இடும் திருநாமங்களை எல்லாம் அவன் உகந்து ஏற்கிறான். ஒவ்வொரு நாமத்திற்கும் பல பொருள்கள் உள்ளன.

## ஸஹஸ்ர நாமம் தோன்றிய வரலாறு

குருக்ஷேத்ரத்தில் மஹாபாரதப் போர் பதினெட்டு தினங்கள் நடந்து முடிந்துவிட்டது. 'சுய இச்சா மரண வரம்' பெற்ற சந்தனு புத்திரர் பீஷ்மாசாரியார் உத்ராயணம் வந்தபின் உயிர் மரிக்கும் எண்ணத்துடன் அர்ஜுனன் அமைத்த 'சரதல்பம்' என்னும் அம்புப் படுக்கையில் படுத்து இருக்கின்றார்.

ஸ்ரீவேத வியாஸர், ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா ஆகிய இருவர் அறிவுரையின் பேரில், பாண்டவர்களுள் முதல்வரான யுதிஷ்டிரர் (தரும புத்ரர்) பீஷ்மாசாரியரை அடிபணிந்து, தமக்கு தர்மோபதேசம் செய்தருளும்படி வேண்டினார். அவரும் அறிய வேண்டிய தர்மங்கள் அனைத்தையும் தருமருக்கு உபதேசித்தார். மீண்டும் தருமர் தமது ஐயங்கள் நீங்க ஆறு கேள்விகள் கேட்டார்.

அவற்றுக்குப் பதில் அளிக்கும் வகையில் பீஷ்மர் சொன்னதாக அமைந்ததுவே 'ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம்'.

எல்லோரும் பாராயணம் செய்ய உகந்த வகையில் அங்கங்கே சிதறியுள்ள மணிகளைச் சேகரித்து மாலையாகத் தொடுப்பதுபோல் விஷ்ணுவின் பல திருநாமங்களுள் ஓர் ஆயிரத்தை ஆய்ந்து எடுத்து 'ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்' என்ற திருநாம மாலையாகத் தந்தவர் ஸ்ரீமந் நாராயணனின் திரு அவதாரம் எனக் கருதப்படும் ஸ்ரீவியாஸரே ஆவர். இத்தகைய பெருமைவாய்ந்த ஸஹஸ்ரநாமம் மஹாபாரத இதிஹாஸத்தில் ஆநுசாஸநிக பர்வம் என்ற பாகத்தில் 149வது அத்யாயமாக அமைந்துள்ளது.

இந்த ஸ்தோத்திரம், 'அனுஷ்டுப்' என்ற ஸமஸ்கிருத விருத்தத்தில் 142 சுலோகங்களாக அமைந்துள்ளது. இந்நூலின் II ஆம் பகுதி மூலம் (ii) ல் உள்ள 13 சுலோகங்களும் அவற்றின் பொருள் விளக்கமும் இந்த ஸஹஸ்ர நாமம் தோன்றிய காரணத்தை விளக்கும். அடுத்த 107 சுலோகங்கள் இந்நூலின் III ஆம் பகுதியில் ஸ்ரீமந் நாராயணனின் ஆயிரம் திருநாமங்களை வரிசையாக எடுத்துரைப்பதாகவும் தொடர்ந்து பலச்ருதியில் 22 சுலோகங்கள் இந்த ஸஹஸ்ர நாமத்தை பாராயணம் செய்பவர்களுக்கு கிடைக்கப்பெறும் நற்பயன்களைக் குறிப்பனவாகவும் அமைந்துள்ளன.

### ஸஹஸ்ர நாமம் பல

ஒவ்வொரு தேவதைக்கும் ஸஹஸ்ர நாம தோத்திரம் உண்டு. விஷ்ணு ஸஹஸ்ர நாமம், லலிதா ஸஹஸ்ர நாமம், சிவ ஸஹஸ்ர நாமம், ராம ஸஹஸ்ர நாமம், கிருஷ்ண ஸஹஸ்ர நாமம், நரஸிம்ஹ ஸஹஸ்ர நாமம் என்று பல ஸஹஸ்ர நாமங்கள் உள்ளன.

ஸஹஸ்ர நாமம் என்றால் அது விஷ்ணு ஸஹஸ்ரநாமம் தான் என்று அறியப்படும் அளவில் இது மிகவும் பிரசித்தமானது; மஹிமை உடையது. இதுபற்றி முன்னோர்கள் சொல்லும் கருத்துகளில் ஒன்று:-

ஸ்ரீமத் ஆதிசங்கரர் ப்ரஹ்ம ஸூத்ரம், உபநிஷதங்கள், ஸ்ரீபகவத்கீதை ஆகிய இம் மூன்றுக்கும் பேருரை (பாஷ்யம்) அருளிச்செய்தபின், ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமாவிற்கு பேருரை

இயற்ற விரும்பினார். அப்பொழுது அவருக்கு நேர்ந்த ஓர் அற்புத நிகழ்வினால் (சம்பவம்) ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமாவிற்கே அவர் பேருரை அருளிச்செய்ய நேர்ந்தது.

## நாமப் பெருமை

ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்குப் பெருமைகள் பல உள்ளன. அவற்றுள் சில வருமாறு :-

1. ஐந்தாம் வேதம் என அனைவராலும் புகழப்படும் மஹாபாரதத்தின் ஸாரமாக உள்ள தன்மை;
2. நாரதாதி தேவ ரிஷிகளால் அனுதினமும் கானம் செய்யப்படுவது ;
3. பகவானுடைய அநந்த கல்யாண குணங்களைக் கூறுவது;
4. ஸ்ரீவியாஸ பகவானால் தொகுக்கப்பட்டது;
5. முற்றும் அறிந்த பீஷ்மரின் திருவாக்காக தருமபுத்திரருக்கு உபதேசிக்கப்பட்டது.
6. ஸ்ரீபகவத்கீதையில் கூறியிருப்பதை உறுதி செய்வதாக உள்ளது;
7. பலராலும் பாராயணம் செய்யப்பட்டுப் பலவிதங்களிலும் பலன் அளிக்கும்படியாக உள்ளது;
8. பார்வதியும் பாராயணம் செய்தது;
9. ஆயுர்வேத ஸாஸ்த்ரங்கள், ஸஹஸ்ர நாமத்தைப் பாராயணம் செய்தால் எல்லா நோய்களும் நீங்கும் எனக் கூறுகின்றன.
10. இவை அனைத்துக்கும் மேலாக, தருமர் - பீஷ்மர் இருவருக்கும் இடையே நிகழ்ந்த சம்வாதத்தின்போது (உரையாடல்) ஸ்ரீ கிருஷ்ண பகவானே அருகிருந்து கேட்டு மகிழ்ந்ததே ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் மேன்மைக்கு ஓர் உன்னதமான எடுத்துக்காட்டாகும்.

திரௌபதியின் அபயக் குரலுக்குச் செவிசாய்த்து மானம் காத்தது 'கோவிந்த' நாமம்; சீதாதேவி தன் உயிரை மாய்த்துக்கொள்ளும் எண்ணத்தை மாற்றியது 'ராம' நாமம். மேலும் பிரஹலாத, துருவ, அஜாமிள, கஜேந்திரமோக்ஷ சரிதைகள் நாராயணனின் திருநாம மகிமையை நன்கு விளக்குவனவாம்.

## சங்ககால நூல்

சங்ககாலத்து நூலாகிய பரிபாடலில் ஆறு பாடல்கள் திருமாலை ஏத்திக் கூறுவனவாகும். அவை யாவும் 'ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம'த்தில் பரக்கக் காணக் கிடக்கின்றன :

"தீயினுள் தெறல் நீ; பூவினுள் நாற்றம் நீ;
கல்லினுள் மணியு நீ; சொல்லினுள் வாய்மை நீ;
அறத்தினுள் அன்பும் நீ; மறத்தினுள் மைந்தும் நீ;
வேதத்து மறை நீ; பூதத்து முதலும் நீ;
அனைத்தும் நீ; அனைத்து உட்பொருளும் நீ...;
பிறவாப் பிறப்பிலை; பிறப்பித்தோர் இலையே." -பரிபாடல்

இங்ஙனம் பழந்தமிழ் நூல்களில் திருமாலின் பெருமை பலவாறாகப் போற்றப்படுகின்றது. மேலும், இப்பாடல் திருமாலின் அந்தர்யாமித்வ சொரூபத்தை விளக்குகிறது.

## ஆழ்வார்கள் அனுபவித்த நாம ருசி

எத் திக்கும் வாழத் தித்திக்கும் தேமதுரத் தமிழில் இயற்றப்பட்ட நாலாயிர திவ்யபிரபந்தத்தில், 150க்கும் மேற்பட்ட பாடல்களில் 'ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமச் சொற்களும் பொருள்களும் பல இடங்களில் பரிமளிப்பது எண்ணி இன்புறத் தக்கதாகும். "நாராயணனே நமக்கே பறை (மோக்ஷம்) தருவான்" என்று திருப்பாவை (1) புகல்கிறது. மேலும், அந்தத் திருப்பாவை (5) தாமோதரனைப் பாடுவதாலும், சிந்திப்பதாலும் நம்முடைய நடந்த, நடக்கின்ற, நடக்கப்போகின்ற மூன்று வினைகளும் தீயினில் பட்ட தூசு போன்று இல்லாமல் போகும் என்றும் கூறுகிறது. இவற்றால் வினைகள் நீக்கமும் மோக்ஷ சாம்ராஜ்யப் பேறும் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தால் பெறலாம் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. இதுபோன்று வேறு பல கருத்துக்களும் பிற பாடல்களிலும் கூறப்பட்டுள்ளன.

புரந்தர தாஸர், துகாராம், கபீர் தாஸர், தியாகராஜர் போன்ற மஹான்கள் பகவந் நாம கீர்த்தனம் செய்தே கீர்த்தியும், உயர்கதியும் அடைந்தார்கள்.

பகவானின் நாமங்களின் பொருள் அறிந்து, உணர்ந்து கீர்த்தனம் செய்தால், வாழ்க்கையின் உண்மை லக்ஷ்யத்தை அறிந்து நலம் பெறுதல் திண்ணம். செய்தற்கு எளியதாகிய இச்செயலை நம்பிக்கையுடன் உறுதியாகச் செய்து பெறற்கரிய பேரின்பம் பெறுவோமாக.

—oOo—

# II. மூலம்

## (i)

ஹரி: ஓம்

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம் |
ப்ரஸந்நவதநம் த்யாயேத் ஸர்வவிக்நோப சாந்தயே || 1

வெண்பட்டு ஆடை உடுத்தியவனும், எங்கும் நிறைந்தவனும், நிலவொளி போன்ற ஒளியுள்ளவனும், நான்கு தோள்களையும் மலர்ந்த முகத்தையும் உடையவனும் ஆகிய தெய்வத்தை, இடர்கள் களைய, தியானிப்போம்.

யஸ்ய த்விரதவக்ராத்யா: பாரிஷத்யா: பரச்சதம் |
விக்நம் நிக்நந்தி ஸததம் விஷ்வக்ஸேநம் தமாச்ரயே || 2

யானைமுகன் முதலான தேவர்களுக்குத் தலைவராய் விளங்குபவரும், அடியார்களின் இன்னல்களை விலக்குபவரும் ஆகிய விஷ்வக்ஸேனரை வணங்குகிறேன்.

வ்யாஸம் வஸிஷ்டநப்தாரம் சக்தே: பௌத்ரமகல்மஷம் |
பராசராத்மஜம் வந்தே சுகதாதம் தபோநிதிம் || 3

வஸிஷ்ட மகரிஷியின் கொள்ளுப்பேரனும், சக்தியின் பேரனும், பராசரரின் குமாரனும், சுகருடைய தகப்பனாரும், சிறந்த தவசியும் ஆன வியாஸ பகவானை தொழுகிறேன்.

வ்யாஸாய விஷ்ணுரூபாய வ்யாஸரூபாய விஷ்ணவே |
நமோ வை ப்ரஹ்மநிதயே வாஸிஷ்டாய நமோ நம: || 4

வஸிஷ்டர் வம்சத்தில் வந்த வேதவித்தான விஷ்ணு ரூபமுள்ள வியாஸரையும், வியாஸ ரூபமுள்ள விஷ்ணுவையும் வணங்குகிறேன்; மீண்டும் மீண்டும் துதிக்கிறேன்.

அவிகாராய சுத்தாய நித்யாய பரமாத்மநே |
ஸதைகரூபரூபாய விஷ்ணவே ஸர்வ ஜிஷ்ணவே || 5

மாற்றம் அற்றவனாய், தூயனாய், என்றும் உள்ளவனாய், பரமாத்மாவாய், எக்காலும் ஒரே திருமேனியனாய், அனைத்தையும் வெல்பவனாய் விளங்கும் விஷ்ணுவுக்கு வந்தனம்.

யஸ்ய ஸ்மரண மாத்ரேண ஜந்மஸம்ஸார பந்தநாத் |
விமுச்யதே நமஸ்தஸ்மை விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே || 6

ஓம் நமோ விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே ||

எவனை எண்ணியவுடன் உலகத்தோர் ஸம்ஸாரக்கட்டினின்றும் விடுபடுவார்களோ, அந்த எல்லாம்வல்ல விஷ்ணுவுக்கு நமஸ்காரம்.

**( ii )**

ஸ்ரீ வைசம்பாயந உவாச—

ச்ருத்வா தர்மாநசேஷேண பாவநாநி ச ஸர்வச: |
யுதிஷ்டிரச்ச சாந்தநவம் புநரேவாப்யபாஷத || 1

ஸ்ரீ வைசம்பாயநர் (ஜனமேஜயரிடம்) கூறியது—

தர்ம சாஸ்திரங்கள் அனைத்தையும் முறைப்படி கேட்டபின், ஐயங்கள் மனத்தில் எழ, அவற்றை நீக்க வேண்டி, தர்மபுத்திரர், சந்த்நு குமாரனான பீஷ்மரிடம் மீண்டும் கேட்கலானார்.

யுதிஷ்டிர உவாச—

கிமேகம் தைவதம் லோகே கிம் வாப்யேகம் பராயணம் |
ஸ்துவந்த: கம் கமர்ச்சந்த: ப்ராப்நுயுர் மாநவா: சுபம் || 2

தர்மபுத்திரர் கூறியது—

வேத முதலான எல்லா நூல்களிலும் கூறப்படும்:

1) ஒன்றேயான தெய்வம் எது?
2) ஒன்றேயான உயர்ந்த புகலிடம் எது?
3) எவனைத் துதித்து உலகோர் உயர்நலம் அடைவர்?
4) எவனை அர்ச்சித்து உலகோர் இகபர இன்பம் அடைவர்?

கோ தர்ம: ஸர்வதர்மாணாம் பவத: பரமோமத: |
கிம்ஜபந் முச்யதே ஜந்துர்-ஜந்மஸார-பந்தநாத் || 3

5) எந்த தர்மமானது, எல்லா தர்மங்களிலும் சிறந்ததாகக் தங்களால் கருதப்படுகிறது?
6) பிறவியை உடையவர்கள் எந்த மந்திரத்தை ஜபித்து அதில் இருந்து விடுபடுவார்கள்?

ஸ்ரீபீஷ்ம உவாச—

ஜகத்ப்ரபும் தேவதேவ-மநந்தம் புருஷோத்தமம் |
ஸ்துவந் நாமஸஹஸ்ரேண புருஷ: ஸததோத்தித: || 4

ஸ்ரீ பீஷ்மர் கூறியது— (6வது கேள்விக்கு பதில்)

உலகாதிபதியாகவும் தேவதேவனாகவும் அளத்தற்கரியவனாகவும் விளங்கும் புருஷோத்தமனை ஒருமித்த சிந்தனையராய் ஆயிரம் திருநாமங்களால் துதிப்பவர்கள்;

**தமேவ சார்ச்சயந்நித்யம் பக்த்யா புருஷமவ்யயம் |**
**த்யாயந் ஸ்துவந் நமஸ்யம்ச்ச யஜமாநஸ்தமேவச || 5**

(4வது கேள்விக்கு பதில்)— நித்தியனான அவனை, எப்போதும், மனம் வாக்கு மெய்களால் முறையே தியானித்தும், புகழ்ந்தும், நமஸ்கரித்தும் வழிபடுபவர்.

**அநாதிநிதம் விஷ்ணும் ஸர்வலோகமஹேச்வரம் |**
**லோகாத்யக்ஷம் ஸ்துவந்நித்யம் ஸர்வதுக்காதிகோ பவேத் || 6**

(3வது கேள்விக்கு பதில்)— முதலும் முடிவும் அற்றவனாய், எங்கும் எதிலும் நிறைந்து இருப்பவனாய், பிரமாதி தேவர்களுக்கும் ஈசுவரனாய், அனைத்தையும் மேலிருந்து கண்காணிப்பவனாய் இருக்கும் விஷ்ணுவை, எப்போதும் பூசிப்பவர், உறுதுயர் கடந்து, உயர்நலம் அடைவர்.

**ப்ரஹ்மண்யம் ஸர்வதர்மஜ்ஞம் லோகாநாம் கீர்த்திவர்த்தநம் |**
**லோகநாதம் மஹத்பூதம் ஸர்வபூதபவோத்பவம் || 7**

வேதங்களால் புகழ்ந்து பேசப்படுபவனும், தர்மங்களை அறிந்தவனும், உலகில் புகழை வளர்ப்பவனும், ஸ்வாமி ஆனவனும், மேலான ஐச்வர்யங்களை உடையவனும், எல்லாவற்றிற்கும் ஆதிகாரணனும் ஆகிய அவனை;

**ஏஷ மே ஸர்வதர்மாணாம் தர்மோதிகதமோ மத: |**
**யத்பக்த்யா புண்டரீகாக்ஷம் ஸ்தவைரர்ச்சேந்நர: ஸதா || 8**

(5வது கேள்விக்கு பதில்)— மானிடர்கள் எப்போதும் பக்தியுடனும் நம்பிக்கையுடனும் தங்கள் உள்ளத் தாமரையில் ஒளிவீசும் வாசுதேவனது (கண்ணன்) புகழ்பாடுவதையே நியமமாகக்கொள்வது, எல்லா தர்மங்களிலும் சிறந்தது என, என்னால் கருதப்படுகிறது.

**பரமம் யோ மஹத்தேஜ: பரமம் யோ மஹத்தப: |**
**பரமம் யோ மஹத்ப்ரஹ்ம பரமம் ய: பராயணம் || 9**

(2வது கேள்விக்கு பதில்):— எது நிகரற்ற ஒளியோ, எது சிறந்த தவ வடிவோ, எது முழுமுதற் பொருளோ, எது சரணம் அடைவதற்குத் தகுந்ததோ அதுவே;

பவித்ராணாம் பவித்ரம் யோ மங்களாநாம் ச மங்களம் |
தைவதம் தேவதாநாம் ச பூதாநாம் யோவ்யய: பிதா || 10

(முதல் கேள்விக்கு பதில்)—— எது பரிசுத்தமானவற்றுள் பரிசுத்தம் ஆவதோ, எது மங்களமானவற்றுள் மங்களம் ஆவதோ, எது தேவதைகளுள் தேவதை ஆவதோ, எது உயிர்களுக்குள் அழிவற்ற பிதாவாய் இருப்பதோ அதுவே ஒன்றேயான தெய்வம்.

யத: ஸர்வாணி பூதாநி பவந்த்யாதி·யுகாகமே |
யஸ்மிம்ச்ச ப்ரளயம் யாந்தி புனரேவ யுகக்ஷயே || 11

எவனிடமிருந்து சிருஷ்டி காலத்தில் உயிரினங்கள் தோன்றினவோ, இடைக்காலத்தில் எவனால் நிலைபெற்று நின்றனவோ, யுகமுடிவில் எவனிடம் மீண்டும் அடைகின்றனவோ...

தஸ்ய லோகப்ரதாநஸ்ய ஜகந்நாதஸ்ய பூபதே |
விஷ்ணோர் நாமஸஹஸ்ரம் மே ச்ருணு பாபபயாபஹம் || 12

அத்தகைய சிறப்பு இயல்புகளுடன் உலகத்துக்கு உரிமை உள்ளவனாய், அதன் ரக்ஷகனாய் உள்ள ஸ்ரீவிஷ்ணுவின் திருநாமங்கள் ஆயிரம், பாபத்தையும் பயத்தையும் போக்க வல்லது; கவனமாகக் கேள்.

யாநி நாமாநி கௌணாநி விக்யாதாநி மஹாத்மந: |
ரிஷிபி: பரிகீதாநி தாநி வக்ஷ்யாமி பூதயே || 13

மஹாத்மா ஆகிய பகவானின் சீர்மிகு நாமங்கள் குணவிசேஷங்கள் கொண்டவை; பிரசித்தமானவை; மந்திரங்கள் நன்கு அறிந்த ரிஷிகளால் ஓயாமல் ஓதப்பட்டவை; புருஷார்த்தங்கள் நான்கையும் (அறம், பொருள், இன்பம், வீடு) வேண்டுவோர், அவற்றை அடைவதற்காகக் கூறுகிறேன்.

## ( iii )

விஷ்ணோர் நாமஸஹஸ்ரஸ்ய வேதவ்யாஸோ மஹாந்ரிஷி: |
சந்தோநுஷ்டுப் ததா தேவோ பகவாந் தேவகீஸுத: ||

இந்த ஆயிரம் திருநாமங்களைக் கண்டறிந்த ரிஷியே வேத வியாஸர். அநுஷ்டுப் சந்தஸ்ஸில் (32 உயிர் எழுத்து உள்ள) அமைந்தவையே இந்த சுலோகங்கள். தேவகி மைந்தனான ஸ்ரீகிருஷ்ண பகவானே இவற்றின் தேவதை.

அம்ருதாம்சூத்பவோ பீஜம் சக்திர்தேவகிநந்தந: |
த்ரிஸாமா ஹ்ருதயம் தஸ்ய சாந்த்யர்த்தே விநியுஜ்யதே ||

'அம்ருதாம்சூத்பவ:' (சந்திரவம்சத்தில் உதித்தவன்) என்பது பீஜம்; 'தேவகீநந்தன:' என்பது சக்தி; 'த்ரிஸாமா' (ஸாம, ருக்குகளால்

பாடப்பட்டவை) என்பது ஹ்ருதயம்; சாந்தியடைவதன் பொருட்டு மந்திர ஜபம் பயன்படுகிறது.

**விஷ்ணும் ஜிஷ்ணும் மஹாவிஷ்ணும் ப்ரபவிஷ்ணும் மஹேச்வரம் |**
**அநேகரூப தைத்யாந்தம் நமாமி புருஷோத்தமம் ||**

எங்கும் வியாபித்துள்ளவனும், எப்போதும் வெற்றிவாகை சூடி விளங்குபவனும், அனைத்துள்ளும் உறைபவனும், தெய்வங்களுக்கு எல்லாம் அரசனானவனும், பல உருவங்கள் கொண்டவனும், அசுரர்களுக்கு அந்தகனாக (யமன்) உள்ளவனும் ஆகிய புருஷோத்தமனான விஷ்ணுவை வணங்குகிறேன்.

## பூர்வ நியாஸம்
(முதலில் தன்னை பகவானிடம் ஒப்படைத்தல்)

**அஸ்ய ஸ்ரீவிஷ்ணோர்-திவ்ய ஸஹஸ்ரநாம - ஸ்தோத்ர மஹாமந்த்ரஸ்ய |**
**ஸ்ரீவேத வ்யாஸோ பகவாந் ரிஷி: | அநுஷ்டுப்சந்த: |**
**ஸ்ரீமஹாவிஷ்ணு: பரமாத்மா ஸ்ரீமந் நாராயணோ தேவதா |**

**அம்ருதாம் சூத்பவோ பாநுரிதி பீஜம் |**
**தேவகீ நந்தந: ஸ்ரேஷ்டேதி சக்தி: |**
**உத்பவ: க்ஷோபணோ தேவ இதி பரமோ மந்த்ர: |**
**சங்கப்ருந்நந்தகீ சக்ரீதி கீலகம் |**
**சார்ங்கதந்வா கதாதர இத்யஸ்த்ரம் |**
**ரதாங்கபாணிர க்ஷோப்ய இதி நேத்ரம் |**
**த்ரிஸாமா ஸாமக: ஸாமேதி கவசம் |**
**ஆநந்தம் பரப்ரஹ்மேதி யோநி: |**
**ருது: ஸுதர்சந: கால இதி திக்பந்த: |**
**ஸ்ரீவிச்வரூப இதி த்யாநம் ||**

ஸ்ரீவிஷ்ணுவின் திவ்ய ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் மஹா மந்திரம் எனப்படும். இதற்கு வேத வியாஸர் ரிஷி ஆவர். முதன்மை ஆனவராகக் கருதப்படும் இவரைப் போற்றுவோம்.

தேவகியின் மகனான ஸ்ரீகிருஷ்ண பகவான் இந்நாமங்களுக்கு உயிர் சக்தியாவர்; தேவதையும் ஆவர். அவர் அமிர்தத்துக்கும் மேலான சிறப்பு வாய்ந்தவர். மேலும் மனம், வாக்கு, காயம் என்னும் முக்கரண சுத்தியாலும் அடையப்பெறுபவர். இவையே இந்த மஹாமந்திரத்திற்கு மனமார்ந்த வழிபாடாகும்.

1. *பகவான் வேத வியாஸர் ரிஷி* ___ சிரசில்;
2. *அனுஷ்டுப் சந்தம்* ___ நாவில்;
3. *ஸ்ரீமந் நாராயணன் தேவதை* ___ ஹ்ருதயத்தில்;
4. *அம்ருதாம் சூத்பவோ பாநு:* ___ பீஜம் (ஆதாரம்)-நாபியில்
5. *தேவகீநந்தந: ஸ்ரேஷ்டா:* ___ சக்தி (வலது புஜத்தில்)
6. *உத்பவ: க்ஷோபணோ தேவ:* ___ சிறந்த மந்திரம் (மார்பில்)
7. *சங்கப்ருந் நந்தகீ சக்ரி* ___ கீலகம் (அச்சாணி) இடது புஜத்தில்
8. *சார்ங்க தந்வா கதாதர:* ___ அஸ்திரம் (தலையைச் சுற்றி நான்கு திசைகளிலும்)
9. *ரதாங்கபாணி ரக்ஷோப்ய:* ___ நேத்ரம் (இரண்டு கண்களிலும்)
10. *த்ரிஸாமா ஸாமக: ஸாம* ___ கவசம் (கைகளால் கவசம்போல் மார்பில்)
11. *ஆநந்தம் பரப்ரஹ்ம* ___ யோநி (கர்ப்பம்)
12. *ருது: ஸுதர்சந: கால:* ___ திக்பந்தம் (எந்த திசையிலிருந்தும் தீமை வராமல் இந்த மந்திரத்தால் காப்பு).
13. *ஸ்ரீவிச்வரூப:* ___ த்யானம் (எங்கும் நிறைந்தவன்).

**ஸ்ரீமஹாவிஷ்ணு கைங்கர்யரூபே**
**ஸஹஸ்ரநாம ஜபே விநியோக: ||**

ஸ்ரீமஹாவிஷ்ணுவின் திருவருள் சித்திக்கும் பொருட்டு ஸஹஸ்ரநாம ஜபத்தில் இதற்கு உபயோகம் (என்று கைகளால் எல்லா அங்கங்களையும் தொடுக).

## த்யானம்

**க்ஷீரோதந்வத் ப்ரதேசே சுசிமணிவிலஸத்**
**ஸைகதே மௌக்திகாநாம் |**
**மாலாக்லுப்தாஸநஸ்த: ஸ்படிகமணிநிபைர்**
**மௌகதிகைர் மண்டிதாங்க: ||**
**சுப்ரைரப்ரை·ரதப்ரை ருபரிவிரசிதைர்**
**முக்தபியூஷவர்ஷை: |**
**ஆநந்தீ ந: புநியா தரி நளீந**
**கதா சங்கபாணிர்முகுந்த: ||** 1

தூய மணிகளாலே ஒளிவீசும் மணல் மேடாகிய திருப்பாற்கடலில், முத்துமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட ஆசனத்தில், திவ்ய ஆபரணங்கள் பலவும் அணியப்பெற்றவனாய் எழுந்தருளியவனும், சங்கு சக்ரம் கதை தாமரை ஆகியவற்றைத் தன் திருக்கைகளில் ஏந்தியவனும், விதானம்போல் மேலே ஸஞ்சரிக்கும் வெண்மையான மேகங்கள் பொழியும் அமுதத் துளிகளால் திருவுள்ளம் குளிர்ந்து ஆனந்தம் அடைபவனுமான ஸ்ரீமந் நாராயணன், பூலோகவாசிகளான நம்மை கடாக்ஷிப்பாராக!

பூ: பாதௌ யஸ்ய நாபிர் வியதஸு·ரநிலச்
சந்த்ரஸூர்யௌ ச நேத்ரே
கர்ணாவாசாச்சிரோ த்யௌர்முகமபிதஹநோ
யஸ்ய வாஸ்தேயமப்தி: ||
அந்தஸ்தம் யஸ்யவிச்வம் ஸுர·நர·கக·கோ
போகிகந்தர்வ தைத்யை: |
சித்ரம் ரம்ரம்யதே தம் த்ரிபுவந
வபுஷம் விஷ்ணுமீசம் நமாமி || 2

எவனுக்கு பூமி திருவடி களாகவும், ஆகாயம் நாபிக்கமலமாகவும், வாயு சுவாசமாகவும், சந்திரனும் சூரியனும் திருக்கண்களாகவும், திக்குகள் எட்டும் திருச்செவிகளாகவும், ஸ்வர்க்கம் (மேலுலகம்) திருமுகமாகவும், அக்கினி வாயாகவும், சமுத்திரம் பீதாம்பரம் அணியும் அடிவயிறாகவும் உள்ளனவோ;

எவனுடைய வயிற்றினுள் தேவர்கள் மனிதர்கள் அசுரர்கள் மற்றும் ஸகல ஜீவராசிகளும் சுகவாழ்வுற்று இருக்கின்றனவோ, அந்த மூவுலகைத் தரிக்கும் மூர்த்தியான விஷ்ணு பகவானை நமஸ்கரிக்கிறேன்.

சாந்தாகாரம் புஜகசயநம் பத்மநாபம் ஸுரேசம்
விச்வாதாரம் ககநஸத்ருசம் மேகவர்ணம் சுபாங்கம் |
லக்ஷ்மீகாந்தம் கமலநயநம் யோகிஹ்ருத் த்யாநகம்யம்
வந்தே விஷ்ணும் பவபயஹரம் ஸர்வலோகைக நாதம் || 3

சாந்த சொரூபி (வடிவ), அநந்தசயனன், கமலநாபன், தேவபிரான், மேகசியாமளன், சர்வவியாபி, வடிவழகன், தாமரையாள் தனிக்கேள்வன், அரவிந்தலோசனன், யோகிகளின் தியானத்தில் அமர்பவன், பிறவிப்பிணி நீக்கும் வல்லுநன், சர்வலோக சரணியன் என்று பலவாறாகப் போற்றப்படும் பகவானை அடிபணிகிறேன்.

மேகச்யாமம் பீதகௌசேயவாஸம்
ஸ்ரீவத்ஸாங்கம் கௌஸ்து போத்பாஸிதாங்கம் |
புண்யோபேதம் புண்டரீகாயதாக்ஷம்
விஷ்ணும் வந்தே ஸர்வலோகைகநாதம் || 4

மேகம் போன்ற கருமேனியனும், பீதக ஆடை உடுத்தியவனும், ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவை (மச்சம்) திருமார்பில் அடையாளமாக உடையவனும், கௌஸ்துப மணியால் பிரகாசிக்கும் திருமேனியனும், தாமரைபோல் மலர்ந்து விரிந்த கண்களை உடையவனும், புண்ணிய புருஷர்களால் சூழப்பட்டவனும், எல்லா உலகங்களுக்கும் ஒப்பற்ற நாயகனாக விளங்குபவனும் ஆகிய விஷ்ணு பகவானை வணங்குகிறேன்.

ஸசங்கசக்ரம் ஸகிரீடகுண்டலம்
ஸபீதவஸ்த்ரம் ஸரஸீருஹேக்ஷணம் |
ஸஹாரவக்ஷஸ்தல சோபிகௌஸ்துபம்
நமாமிவிஷ்ணும் சிரஸா சதுர்புஜம் || 5

சங்கும் சக்கரமும் தரித்தவனாய், கிரீடமும் மகர குண்டலமும் அணிந்தவனாய், பீதக (பொன்) ஆடை உடுத்தியவனாய், தாமரைக் கண்ணனாய், மாலை அணிந்த மார்பில் கௌஸ்துபம் (மணிகள்) பிரகாசிப்பவனாய், சுந்தரத் திருத்தோள் நான்குடன் விளங்கும் விஷ்ணுவின் திருவடித் தாமரைகளில் சென்னியை (சிரசு) வைத்து நமஸ்கரிக்கிறேன்.

ச்சாயாயாம் பாரிஜாதஸ்ய ஹேமஸிம்ஹாஸநோபரி |
ஆஸீநமம்புதச்யாமம் ஆயதாக்ஷமலங்க்ருதம் || 6
சந்த்ராநநம் சதுர்பாஹும் ஸ்ரீவத்ஸாங்கித வக்ஷஸம் |
ருக்மிணீ ஸத்யபாமாப்யாம் ஸஹிதம் க்ருஷ்ணமாச்ரயே || 7

பாரிஜாத விருக்ஷ நிழலில், தங்க சிங்காசனத்தில் அமர்ந்தவனாய், கரிய மேனியனாய், காருண்ய கண்ணனாய், அலங்கார பூஷணனாய், குளிர்ந்த திருமுக மண்டலத்தனாய், நான்கு புஜங்கள் உடையவனாய், ஸ்ரீவத்ஸம் தோன்றும் பரந்த மார்பினனாய், ருக்மிணீ ஸத்யபாமா சமேதனாய் சேவை (காட்சி) சாதிக்கும் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவை சரண் அடைகிறேன்.

★ ★ ★

# III. விஷ்ணு ஸஹஸ்ர நாம சுலோகங்கள்

(1 - 107)

ஹரி: ஓம்

விச்வம் விஷ்ணுர் வஷட்காரோ பூதபவ்ய பவத்ப்ரபு: |
பூதக்ருத் பூதப்ருத் பாவோ பூதாத்மா பூதபாவந: || 1

பூதாத்மா பரமாத்மா ச முக்தாநாம் பரமாகதி: |
அவ்யய: புருஷஸ்ஸாக்ஷீ க்ஷேத்ரஜ்ஞோக்ஷர ஏவ ச || 2

யோகோ யோகவிதாம்நேதா ப்ரதாநபுருஷேச்வர: |
நாரஸிம்ஹவபுஸ் ஸ்ரீமாந் கேசவ: புருஷோத்தம: || 3

ஸர்வ: சர்வ: சிவஸ்தாணுர் பூதாதிர் நிதிரவ்யய: |
ஸம்பவோ பாவநோ பர்த்தா ப்ரபவ: ப்ரபுரீச்வர: || 4

ஸ்வயம்பூ:சம்புராதித்ய: புஷ்கராக்ஷோமஹாஸ்வந: |
அநாதிநிதநோ தாதா விதாதா தாதுருத்தம: || 5

அப்ரமேயோ ஹ்ருஷீகேச: பத்மநாபோமரப்ரபு: |
விச்வகர்மா மநுஸ்த்வஷ்டா ஸ்தவிஷ்டஸ் ஸ்தவிரோத்ருவ: || 6

அக்ராஹ்யச் சாச்வத: க்ருஷ்ணோ லோஹிதாக்ஷ: ப்ரதர்தந: |
ப்ரபூதஸ் த்ரிககுத்தாம பவித்ரம் மங்களம் பரம் || 7

ஈசாந: ப்ராணத: ப்ராணோ ஜ்யேஷ்டஸ் ஸ்ரேஷ்ட: ப்ரஜாபதி: |
ஹிரண்யகர்ப்போ பூகர்ப்போ மாதவோ மதுஸூதந: || 8

ஈச்வரோ விக்ரமீ தந்வீ மேதாவீ விக்ரம: க்ரம: |
அநுத்தமோ துராதர்ஷ: க்ருதஜ்ஞ: க்ருதிராத்மவாந் || 9

ஸுரேசச்ரணம் சர்ம விச்வரேதா: ப்ரஜாபவ: |
அஹஸ் ஸம்வத்ஸரோ வ்யாள: ப்ரத்யயஸ் ஸர்வதர்சந: || 10

அஜஸ் ஸர்வேச்வரஸ்ஸித்தஸ் ஸித்திஸ் ஸர்வாதிரச்யுத: |
வ்ருஷாகபிரமேயாத்மா ஸர்வயோக விநிஸ்ஸ்ருத: || 11

வஸுர் வஸுமநாஸ் ஸத்யஸ் ஸமாத்மா ஸம்மிதஸ்ஸம: |
அமோக: புண்டரீகாக்ஷோ வ்ருஷகர்மா வ்ருஷாக்ருதி: || 12

ருத்ரோ பஹுசிரா பப்ருர் விச்வயோநிஸ்சுசிச்ரவா: |
அம்ருதச் சாஸ்வதஸ் ஸ்தாணுர் வராரோஹோ மஹாதபா: || 13

ஸர்வகஸ் ஸர்வித்பாநுர் விஷ்வக்ஸேநோ ஜநார்தந: |
வேதோ வேதவிதவ்யங்கோ வேதாங்கோ வேதவித்கவி: || 14

லோகாத்யக்ஷஸ் ஸுராத்யக்ஷோ தர்மாத்யக்ஷ: க்ருதாக்ருத: |
சதுராத்மா சதுர்வ்யூஹச் சதுர்தம்ஷ்ட்ரஸ் சதுர்புஜ: || 15

ப்ராஜிஷ்ணுர் போஜநம் போக்தா ஸஹிஷ்ணுர்ஜகதாதிஜ: |
அநகோ விஜயோ ஜேதா விச்வயோனி: புநர்வஸு: || 16

உபேந்த்ரோ வாமந: ப்ராம்சு: அமோகச் சுசிரூர்ஜித: |
அதீந்திரஸ் ஸங்க்ரஹஸ் ஸர்கோ த்ருதாத்மா நியமோ யம: || 17

வேத்யோ வைத்யஸ் ஸதாயோகீ வீரஹா மாதவோ மது: |
அதீந்த்ரியோ மஹாமயோ மஹோத்ஸாஹோ மஹாபல: || 18

மஹாபுத்திர் மஹாவீர்யோ மஹாசக்திர் மஹாத்யுதி: |
அநிர்தேச்யவபு: ஸ்ரீமாநமேயாத்மா மஹாத்ரி த்ருத் || 19

மஹேஷ்வாஸோ மஹீபர்த்தா ஸ்ரீநிவாஸஸ் ஸதாம்கதி: |
அநிருத்தஸ் ஸுராநந்தோ கோவிந்தோ கோவிதாம் பதி: || 20

மரீசிர் தமநோ ஹம்ஸஸ் ஸுபர்ணோ புஜகோத்தம: |
ஹிரண்யநாபஸ்ஸுதபா: பத்மநாப: ப்ரஜாபதி: || 21

அம்ருத்யுஸ் ஸர்வத்ருக் ஸிம்ஹ: ஸந்தாதா ஸந்திமாந்ஸ்திர: |
அஜோ துர்மர்ஷணச் சாஸ்தா விச்ருதாத்மா ஸுராரிஹா || 22

குருர் குருதமோ தாம ஸத்யஸ் ஸத்யபராக்ரம: |
நிமிஷோநிமிஷஸ் ஸ்ரக்வீ வாசஸ்பதி ருதாரதீ: || 23

அக்ரணீர் க்ராமணீ: ஸ்ரீமாந் ந்யாயோ நேதா ஸமீரண: |
ஸஹஸ்ரமூர்த்தா விச்வாத்மா ஸஹஸ்ராக்ஷஸ்
ஸஹஸ்ரபாத் || 24

ஆவர்த்தநோ நிவ்ருத்தாத்மா ஸம்வ்ருதஸ் ஸம்ப்ரமர்தந: |
அஹஸ்ஸம்வர்த்தகோ வஹ்நி ரநிலோ தரணீதர: || 25

ஸுப்ரஸாத: ப்ரஸந்நாத்மா விச்வஸ்ருக் விச்வபுக் விபு: |
ஸத்கர்த்தா ஸத்க்ருதஸ் ஸாதுர் ஜஹ்நுர் நாராயணோ நர: || 26

அஸங்க்யேயோப்ரமேயாத்மா விசிஷ்டஸ்சிஷ்டக்ருச் சுசி: |
ஸித்தார்த்தஸ் ஸித்தஸங்கல்பஸ் ஸித்திதஸ் ஸித்திஸாதந: ||27

வ்ருஷாஹீ வ்ருஷபோ விஷ்ணு: வ்ருஷபர்வா வ்ருஷோதர: |
வர்த்தநோ வர்த்தமாநஸ்ச விவிக்தஸ் ச்ருதிஸாகர: || 28

ஸுபுஜோ துர்த்தரோ வாக்மீ மஹேந்த்ரோ வஸுதோ வஸு: |
நைகரூபோ ப்ருஹத்ரூப: சிபிவிஷ்ட: ப்ரகாசந: || 29

ஓஜஸ்தேஜோ த்யுதித்ர: ப்ரகாசாத்மா ப்ரதாபந: |
ருத்தஸ் ஸ்பஷ்டாக்ஷரோ மந்த்ரச் சந்த்ராம்சுர்
பாஸ்கரத்யுதி: || 30

அம்ருதாம்சூத்பவோ பாநு: சசபிந்துஸ் ஸுரேச்வர: |
ஔஷதம் ஜகதஸ்ஸேதுஸ் ஸத்யதர்ம பராக்ரம: || 31

பூதபவ்ய பவந்நாத: பவந: பாவநோநல: |
காமஹா காமக்ருத் காந்த: காம: காமப்ரத: ப்ரபு: || 32

யுகாதிகருத் யுகாவர்த்தோ நைகமாயோ மஹாசந: |
அத்ருச்யோ வ்யக்தரூபஸ்ச ஸஹஸ்ரஜிதநந்தஜித் || 33

இஷ்டோவிசிஷ்டச் சிஷ்டேஷ்ட:சிகண்டீ நஹுஷோ வ்ருஷ: |
க்ரோதஹா க்ரோதக்ருத்கர்த்தா விச்வபாஹுர் மஹீதர: || 34

அச்யுத: ப்ரதித: ப்ராண: ப்ராணதோ வாஸவாநுஜ: |
அபாந்நிதி ரதிஷ்டாநமப்ரமத்த: ப்ரதிஷ்டித: || 35

ஸ்கந்தஸ் ஸ்கந்ததரோ துர்யோ வரதோ வாயுவாஹந: |
வாஸுதேவோ ப்ருஹத்பாநு ராதிதேவ: புரந்தர: || 36

அசோகஸ் தாரணஸ் தார: சூர: சௌரிர் ஜநேச்வர: |
அநுகூலச்சதாவர்த்த: பத்மீ பத்மநிபேக்ஷண: || 37

பத்மநாபோரவிந்தாக்ஷ: பத்மகர்ப்ப: சரீரப்ருத் |
மஹர்த்திர் ருத்தோ வ்ருத்தாத்மா மஹாக்ஷோ கருடத்வஜ: || 38

அதுல: சரபோ பீம: ஸமயஜ்ஞோ ஹவிர்ஹரி: |
ஸர்வலக்ஷண லக்ஷண்யோ லக்ஷ்மீவாந் ஸமிதிஞ்ஜய: || 39

விக்ஷரோ ரோஹிதோ மார்கோ ஹேதுர் தாமோதரஸ்ஸஹ: |
மஹீதரோ மஹாபாகோ வேகவாநமிதாசந: || 40

உத்பவ: க்ஷோபணோ தேவ: ஸ்ரீகர்ப்ப: பரமேச்வர: |
கரணம் காரணம் கர்த்தா விகர்த்தா கஹநோ குஹ: || 41

வ்யவஸாயோ வ்யவஸ்தாநஸ் ஸம்ஸ்தாநஸ்
ஸ்தா்நதோ த்ருவ: |
பரர்த்தி:பரமஸ்பஷ்டஸ்துஷ்ட: புஷ்ட: சுபேக்ஷண: || 42

ராமோ விராமோ விரதோ மார்கோ நேயோ நயோ நய: |
வீரச் சக்திமதாம் ச்ரேஷ்டோ தர்மோ தர்மவிதுத்தம: || 43

வைகுண்ட: புருஷ: ப்ராண: ப்ராணத: ப்ரணம: ப்ருது: |
ஹிரண்யகர்ப்பசத்ருக்நோ வ்யாப்தோ வாயுரதோக்ஷஜ: || 44

ருதுஸ் ஸுதர்சந: கால: பரமேஷ்டீ பரிக்ரஹ: |
உக்ரஸ் ஸம்வத்ஸரோ தக்ஷோ விச்ராமோ விச்வதக்ஷிண: || 45

விஸ்தார: ஸ்தாவர: ஸ்தாணு: ப்ரமாணம் பீஜமவ்யயம் |
அர்த்தோநர்த்தோ மஹாகோசோ மஹாபோகோ
மஹாதந: || 46

அநிர்விண்ணஸ் ஸ்தவிஷ்டோபூர் தர்மயூபோ மஹாமக: |
நக்ஷத்ரநேமிர் நக்ஷத்ரீ க்ஷம: க்ஷாமஸ் ஸமீஹந || 47

யஜ்ஞ இஜ்யோ மஹேஜ்யச்ச க்ரதுஸ் ஸத்ரம்ஸதாம்கதி: |
ஸர்வதர்சீ நிவ்ருத்தாத்மா ஸர்வஜ்ஞோ ஜ்ஞாந முத்தமம் || 48

ஸுவ்ரதஸ் ஸுமுகஸ் ஸூக்ஷ்மஸ் ஸுகோஷஸ் ஸுகதஸ்
ஸுஹ்ருத் |
மநோஹரோ ஜிதக்ரோதோ வீரபாஹுர் விதாரண: || 49

ஸ்வாபந: ஸ்வவசோ வ்யாபீ நைகாத்மா நைககர்மக்ருத் |
வத்ஸரோ வத்ஸலோ வத்ஸீ ரத்நகர்ப்போ தநேச்வர: || 50

தர்மகுப் தர்மக்ருத் தர்மீ ஸதக்ஷரமஸத்க்ஷரம் |
அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்சு: விதாதா க்ருதலக்ஷண: || 51

கபஸ்திநேமிஸ் ஸத்வஸ்தஸ் ஸிம்ஹோ பூதமஹேச்வர: |
ஆதிதேவோ மஹாதேவோ தேவேசோ தேவப்ருத் குரு: || 52

உத்தரோ கோபதிர் கோப்தா ஜ்ஞாநகம்ய: புராதந: |
சரீரபூதப்ருத் போக்தா கபீந்த்ரோ பூரிதக்ஷிண: || 53

ஸோமபோம்ருதபஸ் ஸோம: புருஜித் புருஸத்தம: |
விநயோ ஜயஸ் ஸத்யஸந்தோ தாசார்ஹஸ்
ஸாத்வதாம்பதி: || 54

ஜீவோ விநயிதா ஸாக்ஷீ முகுந்தோமிதவிக்ரம: |
அம்போநிதி ரநந்தாத்மா மஹோததிசயோந்தக: || 55

அஜோ மஹார்ஹஸ் ஸ்வாபாவ்யோ ஜிதாமித்ர: ப்ரமோதந: |
ஆநந்தோ நந்தநோ நந்தஸ் ஸத்யதர்மா த்ரிவிக்ரம: || 56

மஹர்ஷி: கபிலாசார்ய: க்ருதஜ்ஞோ மேதிநீபதி: |
த்ரிபதஸ் த்ரிதசாத்யக்ஷோ மஹாச்ருங்க: க்ருதாந்தக்ருத் || 57

மஹாவராஹோ கோவிந்த: ஸுஷேண: கநகாங்கதீ |
குஹ்யோ கபீரோ கஹநோ குப்தச் சக்ரகதாதர: || 58

வேதாஸ் ஸ்வாங்கோஜிதக்ருஷ்ணோ த்ருடஸ்
ஸங்கர்ஷணோச்யுத: |
வருணோ வாருணோ வ்ருக்ஷ: புஷ்கராக்ஷோ மஹாமநா: || 59

பகவாந் பகஹா நந்தீ வநமாலீ ஹலாயுத: |
ஆதித்யோ ஜ்யோதிராதித்ய: ஸஹிஷ்ணுர் கதிஸத்தம: || 60

ஸுதந்வா கண்டபரசுர் தாருணோ த்ரவிணப்ரத: |
திவிஸ்ப்ருக் ஸர்வத்ருக்வ்யாஸோ வாசஸ்பதிரயோநிஜ: || 61

த்ரிஸாமா ஸாமகஸ்ஸாம நிர்வாணம் பேஷஜம் பிஷக் |
ஸந்யாஸக்ருச் சம:சாந்தோ நிஷ்டாசாந்தி: பராயணம் || 62

சுபாங்க: சாந்தித: ஸ்ரஷ்டா குமுத: குவலேசய: |
கோஹிதோ கோபதிர் கோப்தா வ்ருஷபாக்ஷோ
வ்ருஷப்ரிய: || 63

அநிவர்த்தீ நிவ்ருத்தாத்மா ஸம்க்ஷேப்தா க்ஷேமக்ருச்சிவ: |
ஸ்ரீவத்ஸவக்ஷா: ஸ்ரீவாஸ: ஸ்ரீபதி: ஸ்ரீமதாம்வர: || 64

ஸ்ரீத: ஸ்ரீச: ஸ்ரீநிவாஸ: ஸ்ரீநிதி: ஸ்ரீவிபாவந: |
ஸ்ரீதர: ஸ்ரீகர: ச்ரேய: ஸ்ரீமாந் லோகத்ரயாச்ரய: || 65

ஸ்வக்ஷ: ஸ்வங்க: ஸதாநந்தோ நந்திர் ஜ்யோதிர் கணேச்வர: |
விஜிதாத்மா விதேயாத்மா ஸத்கீர்த்திச் சிந்நஸம்சய: || 66

உதீர்ணஸ் ஸர்வதஸ்சக்ஷு ரநீச: சாச்வதஸ் ஸ்திர: |
பூசயோ பூஷணோ பூதிரசோக: சோகநாசந: || 67

அர்ச்சிஷ்மா நர்ச்சித: கும்போ விசுத்தாத்மா விசோதந: |
அநிருத்தோப்ரதிரத: ப்ரத்யும்நோமிதவிக்ரம: || 68

காலநேமிநிஹா சௌரி: சூர: சூரஜநேச்வர: |
த்ரிலோகாத்மா த்ரிலோகேச: கேசவ: கேசிஹா ஹரி: || 69

காமதேவ: காமபால: காமீ காந்த: க்ருதாகம: |
அநிர்தேச்யவபுர் விஷ்ணு: வீரோநந்தோ தநஞ்ஜய: || 70

ப்ரஹ்மண்யோ ப்ரஹ்மக்ருத் ப்ரஹ்மா ப்ரஹ்ம ப்ரஹ்ம
விவர்த்தந: |
ப்ரஹ்மவித் ப்ராஹ்மணோ ப்ரஹ்மீ ப்ரஹ்மஜ்ஞோ
ப்ராஹ்மண ப்ரிய: || 71

மஹாக்ரமோ மஹாகர்மா மஹாதேஜா மஹோரக: |
மஹாக்ரதுர் மஹாயஜ்வா மஹாயஜ்ஞோ மஹாஹவி: || 72

ஸ்தவ்யஸ் ஸ்தவப்ரியஸ் ஸ்தோத்ரம் ஸ்துத: ஸ்தோதா
ரணப்ரிய: |
பூர்ண:பூரயிதா புண்ய: புண்யகீர்த்தி ரநாமய: || 73

மநோஜவஸ் தீர்த்தகரோ வஸுரேதா வஸுப்ரத: |
வஸுப்ரதோ வாஸுதேவோ வஸுர் வஸுமநாஹவி: || 74

ஸத்கதி: ஸத்க்ருதி: ஸத்தா ஸத்பூதி: ஸத்பராயண: |
சூரஸேநோ யதுச்ரேஷ்டஸ் ஸந்நிவாஸ: ஸுயாமுந: || 75

பூதாவாஸோ வாஸுதேவ: ஸர்வாஸுநிலயோநல: |
தர்ப்பஹா தர்ப்பதோத்ருப்தோ துர்த்தரோதாபராஜித: || 76

விச்வமூர்த்திர் மஹாமூர்த்தி: தீப்தமூர்த்திரமூர்த்திமாந் |
அநேகமூர்த்திரவ்யக்த: சதமூர்த்தி: சதாநந: || 77

ஏகோ நைக: ஸவ: க: கிம் யத்தத்பதமநுத்தமம் |
லோகபந்துர்லோகநாதோ மாதவோ பக்தவத்ஸல: || 78

ஸுவர்ணவர்ணோ ஹேமாங்கோ வராங்கஸ்சந்தநாங்கதீ |
வீரஹா விஷம: சூந்யோ க்ருதாசீரசல ஸ்சல: || 79

அமாநீ மாநதோ மாந்யோ லோகஸ்வாமீ த்ரிலோகத்ருத் |
ஸுமேதா மேதஜோ தந்ய: ஸத்யமேதா தராதர: || 80

தேஜோ வ்ருஷோ த்யுதிதர: ஸர்வசஸ்த்ரப்ருதாம் வர: |
ப்ரக்ரஹோ நிக்ரஹோ வ்யக்ரோ நைகச்ருங்கோ கதாக்ரஜ: ||81

சதுர்மூர்த்திச்சதுர்பாஹுச் சதுர்வ்யூஹச்சதுர்கதி: |
சதுராத்மாசதுர்பாவச் சதுர்வேதவிதேகபாத் || 82

ஸமாவர்த்தோ நிவ்ருத்தாத்மா துர்ஜயோ துரதிக்ரம: |
துர்லபோ துர்கமோ துர்கோ துராவாஸோ துராரிஹா || 83

சுபாங்கோ லோகஸாரங்க: ஸுதந்துஸ்தந்து வர்த்தந: |
இந்த்ரகர்மா மஹாகர்மா க்ருதகர்மா க்ருதாகம: || 84

உத்பவ:ஸுந்தர: ஸுந்தோ ரத்நநாப: ஸுலோசந: |
அர்க்கோ வாஜஸநி: ச்ருங்கீ ஜயந்த: ஸர்வவிஜ்ஜயீ || 85

ஸுவர்ணபிந்து ரக்ஷோப்யஸ் ஸர்வவாகீச்வரேச்வர: |
மஹாஹ்ரதோ மஹாகர்த்தோ மஹாபூதோ மஹாநிதி: || 86

குமுத: குந்தர: குந்த: பர்ஜந்ய: பாவநோநில: |
அம்ருதாசோம்ருதவபுஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வதோமுக: || 87

ஸுலபஸ் ஸுவ்ரதஸ் ஸித்த: சத்ருஜிச் சத்ருதாபந: |
ந்யக்ரோதோ தும்பரோச்வத்தஸ் சாணூராந்த்ரநிஷூதந: || 88

ஸஹஸ்ரார்ச்சிஸ் ஸப்தஜிஹ்வஸ் ஸப்தைதாஸ் ஸப்தவாஹந: |
அமூர்த்தி ரநகோசிந்த்யோ பயக்ருத் பயநாசந: || 89

அணுர்ப்ருஹத்க்ருசஸ் ஸ்தூலோ குணப்ருந்நிர்குணோ மஹாந் |
அத்ருதஸ் ஸ்வத்ருதஸ் ஸ்வாஸ்ய: ப்ராக்வம்சோ வம்ச வர்த்தந: || 90

பராப்ருத் கதிதோ யோகீ யோகீசஸ் ஸர்வகாமத |
ஆச்ரமச் ச்ரமண: க்ஷாமஸ் ஸுபர்ணோ வாயுவாஹந: || 91

தநுர்த்தரோ தநுர்வேதோ தண்டோ தமயிதாதம: |
அபராஜிதஸ் ஸர்வஸஹோ நியந்தா நியமோ யம: || 92

ஸத்வவாந் ஸாத்விகஸ் ஸத்யஸ் ஸத்யதர்மபராயண: |
அபிப்ராய: ப்ரியார்ஹோர்ஹ: ப்ரியக்ருத் ப்ரீதிவர்த்தந: || 93

விஹாயஸ கதிர் ஜ்யோதிஸ் ஸுருசிர் ஹுதபுக்விபு: |
ரவிர் விரோசநஸ் ஸூர்யஸ் ஸவிதா ரவிலோசந: || 94

அநந்தஹுூதபுக் போக்தா ஸுகதோ நைகதோக்ரஜ: |
அநிர்விண்ணஸ் ஸதாமர்ஷீ லோகா திஷ்டா நமத்புத: || 95

ஸநாத்ஸநாதநதம: கபில: கபிரவ்யய: |
ஸ்வஸ்திதஸ் ஸ்வஸ்திக்ருத் ஸ்வஸ்தி ஸ்வஸ்திபுக் ஸ்வஸ்தி
தக்ஷிண: || 96

அரௌத்ர: குண்டலீ சக்ரீ விக்ரம்யூர்ஜிதசாஸந: |
சப்தாதிக: சப்தஸஹ: சிசிரச் சர்வரீகர: || 97

அக்ரூர: பேஸலோ தக்ஷோ தக்ஷிண: க்ஷமிணாம்வர: |
வித்வத்தமோ வீதபய: புண்யச்ரவணகீர்த்தந: || 98

உத்தாரணோ துஷ்க்ருதிஹா புண்யோ துஸ்ஸ்வப்நநாசந: |
வீரஹா ரக்ஷணஸ்ஸந்தோ ஜீவந: பர்யவஸ்தித: || 99

அநந்தரூபோநந்தஶ்ரீ: ஜிதமந்யுர்பயாபஹ: |
சதுரச்ரோ கபீராத்மா விதிசோ வ்யாதிசோதிச: || 100

அநாதிர் பூர்புவோ லக்ஷ்மீஸ் ஸுவீரோ ருசிராங்கத: |
ஜநநோ ஜநஜந்மாதிர் பீமோ பீமபராக்ரம: || 101

ஆதாரநிலயோ தாதா புஷ்பஹாஸ: ப்ரஜாகர: |
ஊர்த்வகஸ் ஸத்பதாசார: ப்ராணத: ப்ரணவ: பண: || 102

ப்ரமாணம் ப்ராணநிலய: ப்ராணத்ருத் ப்ராணஜீவந: |
தத்வம் தத்வவிதேகாத்மா ஜந்மம்ருத்யுஜராதிக: || 103

பூர்புவஸ் ஸ்வஸ்தருஸ்தாரஸ் ஸவிதா ப்ரபிதாமஹ: |
யஜ்ஞோ யஜ்ஞபதிர்யஜ்வா யஜ்ஞாங்கோ யஜ்ஞவாஹந: || 104

யஜ்ஞப்ருத் யஜ்ஞக்ருத் யஜ்ஞீ யஜ்ஞபுக் யஜ்ஞஸாதந: |
யஜ்ஞாந்தக்ருத் யஜ்ஞகுஹ்யம் அந்நமந்நாத ஏவ ச || 105

ஆத்மயோநிஸ் ஸ்வயஞ்ஜாதோ வைகாநஸ் ஸாமகாயந: |
தேவகீநந்தஸ் ஸ்ரஷ்டா க்ஷிதீச: பாபநாசந: || 106

சங்கப்ருந் நந்தகீ சக்ரீ சார்ங்கதந்வா கதாதர: |
ரதாங்கபாணி ரக்ஷோப்யஸ் ஸர்வப்ரஹரணாயுத: || 107

ஶ்ரீ ஸர்வப்ரஹரணாயுத: ஓம் நம இதி |

ஸ்ரீ ஸர்வப்ரஹரணாயுத: என்பதுடன் மூலத்தில் 1000 திருநாமங்கள் முடிவுற்றன. இப்படி கடைசி திருநாமத்தை திரும்பச் சொல்வதால் ஸஹஸ்ரநாமம் 1000 திருநாமங்கள் சொல்லி முடிக்கப்பட்டது என்பது காட்டப்படுகிறது. கடைசி திருநாமத்தை இருமுறை அநுஸந்தித்து (ஓதி) ஓம் நம: என்று முடிப்பது முறை. ஓம் என்பது ப்ரஹ்ம வாசகம். சுபமான மங்களமான சொல்.

வநமாலீ கதீ சார்ங்கீ சங்கீ சக்ரீ ச நந்தகீ |
ஸ்ரீமாந் நாராயணோ விஷ்ணுர் வாஸுதேவோபிரக்ஷது ||

வைஜயந்தி என்னும் வாடாத துளசிமாலையை அணிந்தவனும், சங்கு சக்கரம் சார்ங்கமெனும் வில், கதை, நந்தகம் என்ற வாள் இவற்றை திவ்ய ஆயுதங்களாக உடையவனும், விஷ்ணு என்றும் வாஸுதேவன் என்றும் பெயர் பூண்டவனுமான ஸ்ரீமஹாலக்ஷ்மி ஸமேத நாராயணன், யாவரையும் காத்தருளுவானாக. (இந்த சுலோகம் மஹாபாரதத்தில் இல்லாவிடினும் பெரியோர்களால் 108வது சுலோகமாக பாராயண கிரமத்தில் மூன்று தடவை சொல்வது வழக்கம்.)



## பலச்ருதி

இதீதம் கீர்த்தநீயஸ்ய கேசவஸ்ய மஹாத்மந:|
நாம்நாம் ஸஹஸ்ரம் திவ்யாநாம் அசேஷண ப்ரகீர்த்திதம் || 108

இவ்வாறாக, நாம ஸங்கீர்த்தனத்துக்கு உரியவனும், எல்லை அற்ற பெருமை வாய்ந்தவனுமான கேசவனது திருநாமங்கள் ஆயிரமும் ஒன்றுவிடாமல் கூறப்பட்டன.

ய இதம் ச்ருணுயாந் நித்யம் யச்சாபி பரிகீர்த்தயேத்|
நாசுபம் ப்ராப்நுயாத் கிஞ்சித் ஸோமுத்ரேஹ ச மாநவ || 109

இதனை, தினந்தோறும் பாராயணம் செய்பவரும், கேட்பவரும் இம்மையிலும் மறுமையிலும் கேடு ஒன்றும் அடையார்.

வேதாந்தகோ ப்ராஹ்மணஸ் ஸ்யாத் க்ஷத்ரியோ விஜயீ பவேத்|
வைச்யோ தநஸம்ருத்தஸ் ஸ்யாச் சூத்ரஸ் ஸுகமவாப்நுயாத் || 110

இதனை, பாராயணம் செய்த பிராமணர், வேத ஞானம் விளங்கப் பெறுவார்; க்ஷத்திரியர், வெற்றி அடைவார்; வைசியர், செல்வம் செழிக்கப் பெறுவார்; சூத்திரர், சுகம் பெறுவார்.

தர்மார்த்தீ பராப்நுயாத்-தர்மம் அர்த்தார்தீ சார்த்த மாப்நுயாத்|
காமாநவாப்நுயாத் காமீ ப்ரஜார்த்தீ சாப்நுயாத் ப்ரஜா: || 111

தர்மத்தை விரும்புவோர் தர்ம பலனையும், செல்வத்தை வேண்டுபவர் செல்வத்தையும், இல்லற சுகத்தை நுகர விரும்புகிறவர் அந்த இன்பத்தையும், ஸந்ததியை (மக்கட் செல்வம்) விரும்புகிறவர் ஸந்ததியையும் அடைவர்.

பக்திமாந் யஸ் ஸதோத்தாய சுசிஸ் தக்த-மானஸ:|
ஸஹஸ்ரம் வாஸுதேவஸ்ய நாம்நாமேதத் ப்ரகீர்த்தயேத் || 112

எவர் ஒருவர், தினமும் அதிகாலையில் எழுந்து, காலைக்கடன்களை முடித்து, பரிசுத்தராய், பக்தி-சிரத்தையுடன் பகவான் வாசுதேவனிடம் மனம் உருகி லயித்தவராய், இவ்வாயிரம் திருநாமங்களை கீர்த்தனம் செய்கிறாரோ,

யச: ப்ராப்நோதி விபுலம் ஜ்ஞாதி ப்ராதாந்யமேவச |
அசலாம் ச்ரிய மாப்நோதி ச்ரேய: ப்ராப்நோத்யுநுத்தமம் || 113

அவர், பெரும்புகழ், நன்மதிப்பு, குறையாத செல்வம், உயர்வற உயர்நலமாகிய மோக்ஷம் ஆகியவற்றை அடைவார்.

ந பயம் க்வசிதாப்நோதி வீர்யம் தேஜஸ்ச விந்ததி |
பவத்யரோகோ த்யுதிமாந் பலரூப குணாந்வித: || 114

அவர் பயமின்மை, நோயின்மை, வீரியம், உத்ஸாகம் உடையவர் ஆவார்; ஒளி, வலிமை, அழகு, நற்குணங்கள் ஆகியவற்றுடன் விளங்குவார்.

ரோகார்த்தோ முச்யதே ரோகாத் பத்தோ முச்யதே பந்தநாத் |
பயாந் முச்யேத பீதஸ்து முச்யேதாபந்ந ஆபத: || 115

நோயாளி நோய் நீக்கப்படுவார்; பந்தத்தில் சிக்கியவர் அதிலிருந்து விடுவிக்கப்படுவார்; பயமுற்றவர் பயம் அற்றவர் ஆவர்; ஆபத்தை அடைந்தவர் அதிலிருந்து விலகியவர் ஆவார்.

துர்காண்யதிதரத்யாசு புருஷ: புருஷோத்தமம் |
ஸ்துவந் நாமஸஹஸ்ரேண நித்யம் பக்தி·ஸமந்வித: || 116

தினமும் பக்தியுடன், பகவான் கிருஷ்ணனை இவ்வாயிரம் திருநாமங்களால் துதிப்பவர், கடத்தற்கரிய துன்பங்களை விரைவில் கடந்துவிடுவார்.

வாஸுதேவாச்ரயோ மர்த்யோ வாஸுதேவ பராயண: |
ஸர்வபாப விசுத்தாத்மா யாதி ப்ரஹ்ம ஸநாதநம் || 117

வாஸுதேவனையே அணுகி, அவனையே சரண் அடைந்த பக்தர், எல்லா பாபங்களினின்றும் விடுபட்டு, பரிசுத்தராகி, சாசுவதமான ப்ரஹ்மத்தை (பரம்பொருள்) அடைகிறார்.

ந வாஸுதேவ பக்தாநாம் அசுபம் வித்யதே க்வசித் |
ஜந்ம ம்ருத்யு ஜராவ்யாதி பயம் நைவோபஜாயதே || 118

வாஸுதேவ பக்தர்களுக்கு, தீங்கு ஏதும் நேருவதில்லை; பிறப்பு—இறப்புகளின் பயமும், மூப்பு, பிணி ஆகியனவும் இல்லை.

இமம் ஸ்தவ மதீயாந: ச்ரத்தாபக்தி ஸமந்வித: |
யுஜ்யேதாத்மாஸுகக்ஷாந்தி ஸ்ரீ த்ருதி ஸ்ம்ருதிகீர்த்திபி: || 119

இந்த ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரத்தை, சிரத்தையோடும் பக்தியோடும் பாராயணம் செய்பவர், ஆத்மசுகம், பொறுமை, செல்வம், தைரியம், ஞாபகசக்தி, புகழ் ஆகியவற்றைப் பெறுவார்.

ந க்ரோதோ ந ச மாத்ஸர்யம் ந லோபோ நாசுபாமதி: |
பவந்தி க்ருத புண்யாநாம் பக்தாநாம் புருஷோத்தமே || 120

புருஷோத்தமனிடம் பக்திகொள்ளும் புண்ணிய ஆத்மாக்களுக்கு, கோபம் பொறாமை பேராசை கெட்ட எண்ணம் இல்லை.

**த்யௌஸ் ஸசந்த்ரார்க்க நக்ஷத்ரா கம் திசோ பூர்மஹோததி: |**
**வாஸுதேவஸ்ய வீர்யேண வித்ருதாநி மஹாத்மந: ||** 121

சந்திரன் சூரியன் நக்ஷத்திரங்களுடன் கூடிய ஆகாசமும், திசைகளும், பூமியும், கடல்களும் ஆகிய அனைத்தும் அந்தந்த நிலைகளிலிருந்து செவ்வனே இயங்குவதற்கு மூலகாரணம் ஸ்ரீவாசுதேவனது பரம சக்தியே!

**ஸஸுராஸுரகந்தர்வம் ஸயக்ஷோரக ராக்ஷஸம் |**
**ஜகத்வசே வர்த்ததேதம் க்ருஷ்ணஸ்ய ஸசராசரம் ||** 122

தேவர், அசுரர், கந்தர்வர், யக்ஷர், நாகர், ராக்ஷஸர் யாவரும் அடங்கிய இந்த சராசரப் பிரபஞ்சம் ஸ்ரீகிருஷ்ணன் வசம் அடங்கியுள்ளன.

**இந்த்ரியாணி மநோபுத்திஸ் ஸத்வம்தேஜோபலம் த்ருதி: |**
**வாஸுதேவாத்மகாந்யாஹு: க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞ ஏவ ச ||** 123

இந்திரியங்கள் என்ற புலன்கள், மனம், புத்தி, ஸத்வமென்ற குணம், சக்தி, பலம், தைரியம், க்ஷேத்ரமாகிய சரீரம், க்ஷேத்ரஞ்சனாகிய ஆத்மா ஆகிய இவை எல்லாம் வாசுதேவ மயம் என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

**ஸர்வாகமாநாமாசார: ப்ரதமம் பரிகல்பித: |**
**ஆசார ப்ரபவோ தர்மோ தர்மஸ்ய ப்ரபுரச்யுத: ||** 124

எல்லா வேதங்களிலும் ஆசாரம் முதன்மையானது எனக் கூறப்பட்டுள்ளது. ஆசாரத்திலிருந்து தர்மம் உண்டாயிற்று; தர்மத்திற்கு பிரபு அச்யுதன்.

**ரிஷய: பிதரோ தேவா மஹாபூதாநி தாதவ: |**
**ஜங்கமா ஜங்கமஞ்சேதம் ஜகந்நாராயணோத்பவம் ||** 125

ரிஷிகள், பித்ருக்கள், தேவர்கள், பஞ்ச மஹாபூதங்கள், போக போக்கியங்கள், அசைவன அசையாதன ஆகியவற்றால் நிரம்பிய பிரபஞ்சம் எல்லாமே நாராயணனிடமிருந்தே உண்டானவை.

**யோகஜ்ஞாநம் ததா ஸாங்க்யம் வித்யாச் சில்பாதி கர்ம ச |**
**வேதாச் சாஸ்த்ராணி விஜ்ஞாநம் ஏதத் ஸர்வம் ஜநார்தநாத் ||** 126

யோகம், ஞானம், ஸாங்கியம், வித்தைகள், சிற்பம் முதலிய தொழில்கள், வேதங்கள், சாஸ்த்ரங்கள், விஞ்ஞானம் ஆகிய இவை அனைத்தும் ஜனார்த்தனனிடம் இருந்தே தோன்றியவை.

**ஏகோ விஷ்ணுர் மஹத்பூதம் ப்ருதக் பூதாந்யநேகச: |**
**த்ரீந் லோகாந் வ்யாப்ய பூதாத்மா புங்க்தே விச்வபுகவ்யய: ||** 127

பெரும் பொருளாக ஒன்றேயாகிய விஷ்ணுவே, பல்வேறாகப் பிரிந்து வெவ்வேறாகி, உண்டான அனைத்தையும் மூவுலகத்தையும் வியாபித்து, உயிருக்குயிராய் நின்று அழிவும் மாறுபாடுமில்லாதவனாய் எல்லாவற்றையும் ஆண்டனுபவிக்கிறான்.

இமம் ஸ்துவம் பகவதோ விஷ்ணோர் வ்யாஸேந கீர்த்திதம் |
படேத்ய இச்சேத் புருஷ: ச்ரேய: ப்ராப்தும் ஸுகாநி ச || 128

எவர் ஒருவர், இம்மையில் சுகத்தையும் மறுமையில் மோக்ஷத்தையும் அடைய விரும்புகிறாரோ, அவர் ஸ்ரீவியாஸ பகவானால் இயற்றப்பட்ட இந்த விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தை பாராயணம் செய்ய வேண்டும்.

விச்வேச்வர மஜம் தேவம் ஜகத: ப்ரபுமவ்யயம் |
பஜந்தியே புஷ்கராக்ஷம் ந தே யாந்தி பராபவம் || 129

ந தே யாந்தி பரபாவம் ஓம் நம இதி |

உலக நாயகனும், பிறப்பு இறப்பு அற்றவனும், பிரபுவுமான தாமரைக் கண்ணனை எவர் வழிபடுகிறாரோ, அவர்கள் உலகில் அவமானமோ தோல்வியோ அடையவே மாட்டார்கள் என்பது உறுதி! உறுதி!! அந்த மங்கள சொரூபமான சர்வேச்வரனுக்கு வணக்கம்.

★ ★ ★

**பாராயணத்தில் உள்ளவை; மஹாபாரதத்தில் இல்லை.**

அர்ஜுந உவாச—
பத்மபத்ரவிசாலாக்ஷ பத்மநாப ஸுரோத்தம |
பக்தாநா மநுரக்தாநாம் த்ராதா பவ ஜநார்த்தந ||

அர்ஜுனன் சொன்னது— தாமரை இதழ் போன்ற விசாலமான கண்களை உடையவனே! கொப்பூழில் தாமரை மலர்ந்தவனே! தேவர்களுள் சிறந்தவனே! ஜனார்த்தனனே! அன்புமிக்க பக்தர்களுக்கு நீ அடைக்கலம் ஆகவேண்டும்.

ஸ்ரீபகவான் உவாச—
யோமாம் நாமஸஹஸ்ரேண ஸ்தோதுமிச்சதி பாண்டவ |
ஸோஹமேகேன ச்லோகேந ஸ்துத ஏவ ந ஸம்சய: ||

'ஸ்துத ஏவ ந ஸம்சய' ஓம் நம இதி.

ஸ்ரீபகவான் கூறியது— ஹே! பாண்டவா! (அர்ஜுந!) எவன் என்னை ஸஹஸ்ர நாமத்தால் துதிக்க விரும்பினானோ, அவனுடைய ஒரு சுலோகத்தாலேயே துதிக்கப் பெற்றவனாவேன்; அதில் ஐயமில்லை.

★ ★ ★

வ்யாச உவாச—

வாஸநாத் வாஸுதேவஸ்ய வாஸிதம் தே ஜகத்த்ரயம் |
ஸர்வபூத நிவாஸோஸி வாஸுதேவ நமோஸ்துதே ||

'ஸ்ரீவாஸுதேவ நமோஸ்து த' ஓம் நம இதி.

ஸ்ரீ வியாஸ பகவான் கூறியது— வாஸுதேவனே! நீ எல்லா உலகங்களிலும் வியாபித்துள்ளபடியால், அவை நிலைத்து உள்ளன. அங்குள்ள எல்லா ஜீவராசிகளுக்கும் நீ வசிக்கும் இடமாய் இருக்கின்றாய். உன்னைக் கும்பிடுகிறேன்.

★ ★ ★

பார்வத்யுவாச உவாச—

கேநோபாயேந லகுநா விஷ்ணோர் நாம ஸஹஸ்ரம் |
பட்யதே பண்டிதைர் நித்யம் ச்ரோதுமிச்சாம்யஹம் ப்ரபோ ||

பார்வதி கூறியது— ஸ்வாமி! எந்த உபாயத்தால் விஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்கள் பண்டிதர்களால் தினமும் ஜபிக்கப்படுகின்றதோ, அந்த உபாயத்தை உம்மிடமிருந்து அறிய விரும்புகிறேன்.

ஈச்வர உவாச—

ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மநோரமே |
ஸஹஸ்ரநாம தத்துல்யம் ராமநாம வராநநே ||

'ஸ்ரீராமநாம வராநந' ஓம் நம இதி.

ஈச்வரன் கூறியது— சுந்தர முகம் உடையவளே! சிந்தனைக்கு இனியனான ஸ்ரீராமனை 'ராம' என்று மும்முறை நாவினால் நவின்று (பெரிதொலித்து) இன்பம் எய்துகிறேன். இந்த 'ராம' நாமம் ஒன்றே ஆயிரம் திருநாமங்களுக்குச் சமம் ஆகும்.

ஓம் நமஸ்காரம்.

★ ★ ★

ப்ரஹ்மோவாச—

நமோஸ்துவநந்தாய ஸஹஸ்ரமூர்த்தயே
ஸஹஸ்ரபாதாக்ஷி சிரோரு பாஹவே |
ஸஹஸ்ரநாம்நே புருஷாய சாச்வதே
ஸஹஸ்ரகோடி யுகதாரிணே நம: ||

'ஸஹஸ்ரகோடி யுகதாரிணே' ஓம் நம இதி.

பிரம்மா கூறியது— ஆயிரம் வடிவுடையாய்! தாள்கள் ஆயிரத்தாய்! கண்கள் ஆயிரத்தாய்! தோள்கள் ஆயிரத்தாய்! முடிகள் ஆயிரத்தாய்! பேர்கள் ஆயிரத்தாய்! யுகங்கள் ஆயிரத்தாய்! அநந்தமூர்த்தியே! உனது பாத அரவிந்தம் பணிகிறேன்.

ஸஞ்ஜய உவாச—
யத்ர யோகேச்வர க்ருஷ்ணோ யத்ர பார்தோதநுர்த்தர꞉ |
தத்ர ஸ்ரீர்விஜயோ பூதி꞉த்ருவா நீதிர் மதிர் மம ||

ஸஞ்ஜயன் கூறியது— எங்கு, யோகத்திற்குத் தலைவனான ஸ்ரீகிருஷ்ணன் இருக்கிறானோ, எங்கு அவனுடன் வில் ஏந்திய அர்ஜுனனும் உளனோ, அவ்விடத்தில், வெற்றியும் ஒளியும் நீதியும் நிச்சயமாக உள்ளன.

★ ★ ★

ஸ்ரீபகவாந் உவாச—
அநந்யாச் சிந்தயந்தோ மாம் யே ஜநா꞉ பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம் யஹம் ||

ஸ்ரீபகவான் கூறியது— என்னையே நினைத்து என்னையே வழிபடும் அன்பர்களின் யோக க்ஷேமத்திற்கு நான் பொறுப்பாகிறேன்.

பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் |
தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ||

நல்லோர்களைக் காத்தற்கும், தீயோர்களை அழித்தற்கும், தர்மத்தை நிலைநிறுத்தற்கும் யுகந்தோறும் அவதரிக்கிறேன்.

(இவ்விரண்டு சுலோகங்களும் கீதையில் உள்ளன.)

★ ★ ★

ஆர்த்தா விஷண்ணாச் சிதிலாச்ச பீதா꞉
கோரேஷு ச வ்யாதிஷு வர்த்தமாநா꞉ |
ஸங்கீர்த்ய நாராயண சப்தமாத்ரம்
விமுக்த துக்காஸ் ஸுகிநோ பவந்து ||

துன்பப்படுபவரும், மனம் நொந்து வருந்துபவரும், பல கொடிய பிணிகளால் பீடிக்கப்பட்டவரும் நாராயணன் திருநாமத்தைச் சொன்ன அளவிலே, சகல துயரங்களும் நீங்கப்பெற்று இன்பம் அடைவார்கள்.

★ ★ ★

காயேநவாசா மநஸேந்திரியைர்வா
புத்யாத்மநாவா ப்ரக்ருதே꞉ ஸ்வபாவாத் |
கரோமி யத்யத் ஸகலம் பரஸ்மை
நாராயணாயேதி ஸமர்ப்பயாமி ||

சரீரத்தாலோ, வாக்காலோ, மனத்தாலோ, கர்மேந்திரியங்களாலோ, ஞானேந்திரியங்களாலோ, இயற்கையின் இயக்கத்தினாலோ எது எதைச் செய்கின்றேனோ அவை எல்லாவற்றையும் பரமபுருஷனான நாராயணனின் திருவடித் தாமரையில் சமர்ப்பிக்கிறேன்.

ஸ்ரீமஹாபாரதத்தில் ஆநுசாஸநிக பர்வத்தில் பீஷ்ம யுதிஷ்டிர ஸம்வாதத்தில் "ஸ்ரீவிஷ்ணுவின் ஆயிரநாமங்கள்" அடங்கிய துதி முற்றிற்று.

ஓம் தத் ஸத்.

## IV. நாமமும் பொருள் விளக்கமும்

### சுலோகம் - 1

1. *விச்வம்* - அனைத்துப் பொருள்களுமாய் இருப்பவன்.

2. *விஷ்ணு:* - எங்கும் உறைபவன் (தங்குபவன்); "பாலுள் நெய்யே போல்" - திருவாய். 8.5.10. (வ்யாப்னோதி இதி விஷ்ணு)

3. *வஷட்கார:* - எதையும் தன் வசம் ஆக்கிக்கொள்பவன்.

4. *பூத பவ்ய பவத்ப்ரபு:* - கடந்த காலம், எதிர் காலம், நிகழ் காலம் ஆகிய மூன்றுக்கும் தலைவன்.

5. *பூத க்ருத்* - அனைத்தையும் படைப்பவன்; "ஞாலம் படைத்த எம் முகில் வண்ணனே" - திருவாய். 3.2.1. (ஞாலம் - உலகம்)

6. *பூத ப்ருத்* - எல்லாவற்றையும் தாங்குபவன்.

7. *பாவ:* - எல்லாப் பொருள்களிலும் தங்கி இருப்பவன்.

8. *பூதாத்மா* - உலகத்துக்கு உயிராய் இருப்பவன்; "ஏழ் உலகுக்கு உயிர் ஆய எம் கார்வண்ணனை" - பெ.தி. 1.9.10.

9. *பூத பாவந:* - உயிரினங்களை அபிவிருத்தி செய்பவன்.

### சுலோகம் - 2

10. *பூதாத்மா* - தூய சுபாவம் உடையவன்; "தீர்த்தன்" - திருவாய். 7.10.10. (தீர்த்தன் - பரிசுத்தன்)

11. *பரமாத்மா* - சர்வேசன் (எல்லா உயிர்க்கும் தலைவன்); "ஒத்தார் மிக்காரை இலையாய மா மாய" - திருவாய். 2.3.2.

12. *முக்தாநாம் பரமா கதி:* - திருநாடு (மோட்சம்) அடைந்தவர் முடிவாகச் சேரும் உயர்ந்த இடமாய்த் திகழ்பவன்.

13. *அவ்யய:* - எவரும் தன்னை விட்டுப் பிரியாமல் இருப்பவன்; "உற்றார்களுக்கு உற்றேனும் யானே என்னும்" - திருவாய். 5.6.7.

14. *புருஷ:* - பரம உதாரன்; "வேண்டிற்று எல்லாம் தரும் கோது இல் என் வள்ளல்" - திருவாய். 3.9.5. (கோது - குற்றம், தோஷம்)

15. *ஸாக்ஷீ* - எல்லாம் பார்ப்பவன்.

16. *க்ஷேத்ரஜ்ஞ:* - முக்தர்கள் சென்று சேரும் இடத்தை அறிபவன்.

17. *அக்ஷர:* - கருணையில் குறையாதவன்.

## ஸ்லோகம் - 3

18. *யோக:* - முக்திக்குத் தானே வழியானவன்.

19. *யோகவிதாம் நேதா* - பல உபாயங்களைக் கடைப்பிடிக்கும் பக்தர்களுக்குக் கருணை புரிபவன்.

20. *ப்ரதாந புருஷேச்வர:* - பிரகிருதியையும் அதில் உள்ள ஜீவர்களையும் நிர்வகிப்பவன்.

21. *நாரஸிம்ஹ வபு:* - நரசிம்ம அவதாரன்; "அரி உருவும் ஆள் உருவும் ஆகி" - மு.தி.அ. 31. (திருச்சிங்கவேள் குன்ற (அஹோபிலம்) திவ்யதேசப் பெருமாள் நரசிம்மர்)

22. *ஸ்ரீமாந்* - சிறந்த அழகன்; "அழகியான்" - 4. தி.அ. 22. (திருமாலிருஞ்சோலை திவ்யதேசப் பெருமாள் அழகர்)

23. கேசவ: - அழகிய கூந்தலை உடையவன்; "குழல் அழகர்" - நா.தி. 11-2.

★24. *புருஷோத்தம:* - ஆடவருள் சிறந்தோன்; "மணிவண்ண உருவின் மால் புருடோத்தமன்" - பெ.ஆ.தி. 4.7.2. (திருவண் புருடோத்தம - திருநாங்கூர் திவ்யதேசப் பெருமாள் ஸ்ரீ புருடோத்தமன்)

## ஸ்லோகம் - 4

25. *ஸர்வ:* - எல்லாமாய் இருப்பவன்; "யாவரும் ஆய், யாவையும் ஆய், எழில் வேதப் பொருள்களும் ஆய் மூவரும் ஆய்" - பெ.தி. 4.1.2.

26. *சர்வ:* - தீங்குகளை அகற்றுபவன்; "கடிவார் தீயவினைகள்" - திருவாய். 1.6.10. (கடிவார் - நீக்குவார்)

27. *சிவ:* - சுபங்களைத் தருபவன்.

28. *ஸ்தாணு:* - நிலையானவன்.

29. *பூதாதி:* - எல்லாவற்றையும் சரீரமாக உடையவன்.

30. *நிதிரவ்யய:* - அழியாத நிதி ஆனவன்; "நிதியே" - பெ.தி. 7.1.7.

31. *ஸம்பவ:* - அவதரிப்பவன்.

32. *பாவந:* - பிழைக்குமாறு அருள்புரிபவன்; "நரகத்து அழுந்தி நடுங்குகின்றேற்கு அஞ்சேல் என்று, அடியேனை ஆட்கொள்ள வல்லானை" - பெ.தி. 8.9.6.

---

★ இக்குறியிட்ட நாமங்கள் இராமனைக் குறிக்கும்.

33. *பர்த்தா* - ஆதரிப்பவன்; "மூவுலகும் காவலோன்" - திருவாய். 2.8.5.

34. *ப்ரபவ:* - மிகச் சிறந்த பிறப்பு உடையவன்; "பிறந்தஆறும் வளர்ந்தஆறும்... சிறந்த வான்சுடரே" - திருவாய். 5.10.1. (ஆறும் - விதம்)

35. *ப்ரபு:* - அளவிலா ஆற்றல் உடையவன்; "ஆற்றல் மிக்கு ஆளும் அம்மானை" - திருவாய். 4.5.1.

36. *ஈச்வர:* - ஆள்வோன்.

## சுலோகம் - 5

37. *ஸ்வயம்பூ:* - தானே அவதரிப்பவன்; "தனி மாப் புகழே எஞ்ஞான்றும் நிற்கும்படியாத் தான்தோன்றி" - திருவாய். 8.10.7. (திருமலை-திருப்பதி, ஸ்ரீரங்கம், வானமாமலை (நாங்குநேரி), ஸ்ரீமுஷ்ணம் இவை சுயம்புத் தலங்கள்)

38. *சம்பு:* - தன் அழகாலும் திவ்ய குணங்களாலும் அடியார்களை மகிழ்விப்பவன்.

39. *ஆதித்ய:* - சூரியன்.

40. *புஷ்கராக்ஷ:* (புஷ்கர + அக்ஷ:) - "செந்தாமரைக் கண்"(ணன்) - திருவாய். 6.10.9.

41. *மஹாஸ்வந:* - சிறந்த திருநாம ஒலியை உடையவன்; "செவிக்கு இன்பம் ஆவதும் செங்கண்மால் நாமம்" - 4. தி.அ. 69.

42. *அநாதிநிதந:* - முதலும் முடிவும் அற்றவன்; "தோற்றம் கேடு அவை இல்லவன்" - திருவாய். 3.6.6. (கேடு - அழிவு)

43. *தாதா* - படைப்பவன்; "நான்முகன் - தன்னொடு தேவர் உலகோடு உயிர் படைத்தான்" - திருவாய். 4.10.1.

44. *விதாதா* - உற்பத்தி செய்பவன்.

45. *தாதுருத்தம:* - நான்முகனைக் காட்டிலும் சிறந்தவன் (பிள்ளையைக் காட்டிலும் பிதா சிறந்தவன்).

## சுலோகம் - 6

46. *அப்ரமேய:* - அறிவுக்கு எட்டாத பெருமை உடையவன்.

47. *ஹ்ருஷீகேச:* - ஐம்பொறிகளை வென்றவன்.

48. *பத்ம நாப:* - தாமரை மலர் போன்ற கொப்பூழை உடைய திருமால்; "தாமரை உந்தித் தனிப்பெரு நாயக" - ஆசிரியம். 1.

49. *அமர ப்ரபு:* - உம்பர்கோன்; "உம்பர் கோமானே" - பாவை. 17. (உம்பர் - தேவர்) (திருவழுந்தூர் (தேரழுந்தூர்) திவ்யதேசப் பெருமாள் தேவாதிராஜன்)

50. *விச்வ கர்மா* - சிருஷ்டி கர்த்தா.

51. *மநு:* - சங்கற்ப சக்தி வாய்ந்தவன்.

52. *த்வஷ்டா* - பாகுபாடு செய்பவன்.

53. *ஸ்தவிஷ்ட:* - பெரிய உருவம் உடையவன்.

54. *ஸ்தவிர:* - என்றும் நிலைத்திருப்பவன்; "எக்காலத்து எந்தாய்" - திருவாய். 2.9.8.

55. *த்ருவ:* - மாற்றம் அடையாதவன்.

### சுலோகம் - 7

56. *அக்ராஹ்ய:* - அறிய முடியாதவன்.

57. *சாச்வத:* - என்றும் உள்ளவன்; "என்றும் ஓர் இயல்வொடு நின்ற எம் திடரே" - திருவாய். 1.1.6. (திடர் - உறுதி உடையவன்)

58. *க்ருஷ்ண:* - சதா ஆனந்தம் உள்ளவன்; "துயரம் இல் சீர்க் கண்ணன்" - திருவாய். 3.10.6.

59. *லோஹிதாக்ஷ:* - சிவந்த கண்களை உடையவன்; "செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமால்" - பாவை. 30.

60. *ப்ரதர்தந:* - முடிவில் எல்லாவற்றையும் அழிப்பவன்.

61. *ப்ரபூத:* - பரிபூரணன்; "குறைவு ஒன்றும் இல்லாத கோவிந்தா" - பாவை. 28.

62. *த்ரிக குத்தாமா* - மூன்று பாகம் உடைய பரமபதத்தை இருப்பிடமாகக் கொண்டவன்.

63. *பவித்ரம்* - தூய்மை; "பவித்திரனே" - திருவாய். 2.3.7.

64. *மங்களம் பரம்* - மங்கள குணங்கள் நிறைந்தவன்; "உயர்வு அற உயர்நலம் உடையவன்" - திருவாய். 1.1.1.

## சுலோகம் - 8

65. *ஈசாந:* - நிர்வாகி; "ஏழ் உலகுக்கும் நாதன்" - திருவாய். 2.7.2.

66. *ப்ராணத:* - சக்தியைக் கொடுப்பவன்.

67. *ப்ராண:* - உயிராக இருப்பவன்; "எப்பொருட்கும் உயிர்ஆய்" - திருவாய். 2.3.2.

68. *ஜ்யேஷ்ட:* - முதல்வன்.

69. *ச்ரேஷ்ட:* - உயர்ந்தோன்.

70. *ப்ரஜாபதி:* - தேவர்களின் தலைவன்; "அமரர் அப்பனை" - திருவாய். 8.1.11.

71. *ஹிரண்ய கர்ப்ப:* - பொன் உலகில் வாழ்பவன்; "சூழ் பொன் விசும்பே" - திருவாய். 10.8.11. (விசும்பு - ஆகாயம்)

72. *பூ கர்ப்ப:* - புவனியைத் தன் வயிற்றில் வைத்துக் காப்பவன்.

73. *மாதவ:* - லக்ஷ்மி பதி; "திரு மா மகள் கேள்வா" - திருவாய். 6.10.4.

74. *மதுஸூதந:* - மது என்னும் அரக்கனை அழித்தவன்.

## சுலோகம் - 9

75. *ஈச்வர:* - தலைவன்.

★76. *விக்ரமீ* - பராக்கிரமன்; "வெங் கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்காய்த் தோன்றி விண் முழுதும் உயக்கொண்ட வீரன்" - பெருமாள். 10.1.

★77. *தந்வீ* - சாரங்கபாணி; "சார்ங்க விற்கையனே" - பெ.ஆ.தி. 1.6.7. (சார்ங்கம் - திருமாலின் வில்லின் பெயர்) (திருக்குடந்தை - கும்பகோண திவ்யதேசப் பெருமாள் சாரங்கபாணி)

78. *மேதாவீ* - அறிவிற்கு இருப்பிடமானவன்.

79. *விக்ரம:* - கருடனை ஊர்தியாகக் கொண்டவன்; "புள் ஊரும் பொன் மலையை" - பெ.தி. 11.7.1. (புள் - கருடப் பறவை)

80. *க்ரம:* - எங்கும் வியாபித்தவன்.

81. *அநுத்தம:* - தம்பிரான் (தனக்குத் தானே தலைவன்); "தன் ஒப்பார் இல் அப்பன்" - திருவாய். 6.3.9. (திருவிண்ணகர் திவ்யதேசப் பெருமாள் ஒப்பிலிஅப்பன்)

★82. *துராதர்ஷ:* - எந்நிலையிலும் கலக்கம் அற்றவன்; "வெவ்வாயேன் வெவ்வுரை கேட்டு இருநிலத்தை வேண்டாதே, விரைந்து வென்றி மைவாய களிறொழிந்து தேரொழிந்து மாவொழிந்து வனமே மேவி" - பெருமாள். 9.2.

83. *க்ருதஜ்ஞ:* - பக்தர்கள் செய்யும் மிகச் சிறிய வழிபாட்டுச் செயல்களையும் பெரியதாக எண்ணிப் போற்றுபவன்; "நல் நீர் தூய், புரிவதுவும் புகை பூவே" - திருவாய். 1.6.1. (தூய் - தெளித்து)

84. *க்ருதி:* - செய்விப்பவன்; "தாய் நினைந்த கன்றே ஒக்க என்னையும் தன்னையே நினைக்கச் செய்து, தான் எனக்கு ஆய் நினைந்து அருள் செய்யும் அப்பன்" - பெ.தி. 7.3.2.

85. *ஆத்மவாந்* - ஜீவாத்மாக்களைத் தனது சொத்தாகக் கொண்டவன்; "எனது ஆவியும் உனதே" - திருவாய். 5.7.10.

## சுலோகம் - 10

86. *ஸுரேச:* - விண்ணோர் பெருமான்; "தெய்வ நாயகன்" - திருவாய். 5.2.8. (திருவயிந்திரபுர திவ்யதேசப் பெருமாள் தெய்வநாயகன்)

★87. *சரணம்* - உபாயமாக இருப்பவன்; "ஆறு எனக்கு நின் பாதமே சரண் ஆகத் தந்தொழிந்தாய்" - திருவாய். 5.7.10. (ஆறு - உபாயம்)

88. *சர்ம* - மிகவும் பயன்படுபவன்; "எனக்குத் தேனே, பாலே, கன்னலே, அமுதே" - திருவாய். 10.7.2.

89. *விச்வரேதா:* - எல்லா உலகங்களுக்கும் மூலகாரணம் ஆனவன்.

90. *ப்ரஜா பவ:* - உயிரினங்கள் சேரும் இடமாயிருப்பவன்.

91. *அஹ:* - தன் அடியார்களுக்கு சூரிய ஒளியாக விளங்குபவன்; "பகல் கண்டேன்; நாரணனைக் கண்டேன்" - 2. தி.அ. 81.

92. *ஸம்வத்ஸர:* - உயிர்களை மேன்மைப்படுத்துவதற்காகச் சேர்ந்து வசிப்பவன்; "அல்லும் நன் பகலும் இடைவீடு இன்றி நல்கி, என்னை விடான்" - திருவாய். 1.10.8.

93. *வ்யாள:* - தன் வசமாக்குபவன்; "இசைவித்து என்னை உன் தாள் - இணைக்கீழ் இருத்தும் அம்மானே" - திருவாய். 5.8.9. (தாள் இணை - திருவடிகள் இரண்டு)

94. *ப்ரத்யய:* - நம்பிக்கை ஊட்டுபவன்; "திருக்கோட்டியூர் நம்பனை நரசிங்கனை" - பெ.ஆ.தி. 4.4.9.

95. *ஸர்வ தர்சந:* - பக்தர்களிடம் தன்னை பூரணமாகக் காட்டுபவன்; "தூ வடிவின் பார்-மகள், பூ-மங்கையொடு சுடர் ஆழி, சங்கு இருபால் பொலிந்து தோன்ற" - பெ.தி. 2.10.9. (பொலிந்து - விளங்கி)

## சுலோகம் - 11

96. *அஜ:* - இடையூறுகளை விலக்குபவன்; "எண்ணுவார் இடரைக் களைவானே" - பெ.ஆ.தி. 5.1.8. "ஸர்வபா பேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச" - எல்லாப் பாபங்களிலிருந்தும் நான் உன்னை விடுவிக்கிறேன். இது கீதையில் கண்ணன் வாக்கு (சரம சுலோகம்).

97. *ஸர்வேச்வர:* - தன் அன்பர்களிடம் தானே சென்று அடைபவன்; "வந்தருளி என் நெஞ்சு இடம் கொண்ட வானவர் - கொழுந்தே" - திருவாய். 5.7.7.

98. *ஸித்த:* - என்றும் உள்ளவன்.

99. *ஸித்தி:* - பேறாயிருப்பவன் (சிறந்த பயனாக, அடையத் தக்கதாக); "அடியை அடைந்து... இன்பத்து... மூழ்கினேன்" - திருவாய். 2.6.8.

★100. *ஸர்வாதி:* - எல்லாப் பலன்களுக்கும் தானே காரணமாய் இருப்பவன்.

★101. *அச்யுத:* - அடியார்களை நழுவ விடாதவன்; "அச்சுதன் அமலன்" - திருவாய். 3.4.4.

102. *வ்ருஷாகபி:* - தர்ம வடிவான வராஹன் (பன்றி அவதாரன்).

★103. *அமேயாத்மா* - அறியவும் அளவிடவும் முடியாதவன்.

104. *ஸர்வ யோக விநிஸ்ஸ்ருத:* - எல்லா உபாயங்களாலும் அடையத் தக்கவன்.

## சுலோகம் - 12

105. *வஸு:* - எண்ணுவார் மனத்தே கோயில் கொள்பவன்; "உள்ளுவார் உள்ளத்தாய்" - நெ.தா. 8.

106. *வஸுமநா:* - அடியார்களே தன் செல்வம் என்று எண்ணுபவன்.

★107. *ஸத்ய:* - அன்பர்களின் விருப்பங்களை நிறைவு செய்பவன்.

★108. *ஸமாத்மா* - (ஸம + ஆத்மா) - தன்னைச் சார்ந்தவர்கள் அனைவரையும் சமமாகக் கருதுபவன்; "ஏழை, ஏதலன், கீழ்மகன்

என்னாது இரங்கி, மற்று அவற்கு இன் அருள் சுரந்து" - பெ.தி. 5.8.1. (ஏதலன் - பகைவன்)

★109. *ஸம்மித:* - அன்பர்களிடம் கட்டுப்பட்டு இருப்பவன்; "கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டு உண்ணப் பண்ணிய பெருமாயன்" - க.சி.தா. 1. (கிருஷ்ணனுக்கும் பொருந்தும்)

★110. *ஸம:* - பொது நோக்கு உடையவன்; "அன்பன் ஆகும் தன தாள் அடைந்தார்க்கு எல்லாம்" - திருவாய். 9.10.6. (தன தாள் - தன் பாதம்)

★111. *அமோக:* - பயன் உள்ளவன்.

112. *புண்டரீகாக்ஷ:* - கண் போன்றவன்; "கண் ஆவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" - திருவாய். 1.8.3. (திருவெள்ளறை திவ்யதேசப் பெருமாள் புண்டரீகாக்ஷன்)

113. *வ்ருஷ கர்மா* - நற்செயல் செய்பவன்.

114. *வ்ருஷாக்ருதி:* (வ்ருஷ + ஆக்ருதி:) - தர்மமே வடிவாக உள்ளவன்.

## சுலோகம் - 13

115. *ருத்ர:* - ஆனந்தக் கண்ணீர் வரச் செய்பவன்; "கண்ண நீர் கொண்டு அரங்கன் கோயில் - திருமுற்றம் சேறு செய் தொண்டர்" - பெருமாள். 2.3.

116. *பஹு சிரா:* - பல தலைகளை உடையவன்; "முடிகள் ஆயிரத்தாய்" - திருவாய். 8.1.10.

117. *பப்ரு:* - தாங்குபவன்.

118. *விச்வ யோநி:* - சகல காரணன்; "காரணன் நீ" - 4. தி.அ. 96.

119. *சுசி ச்ரவா:* - துதிக்குச் செவி சாய்ப்பவன்.

★120. *அம்ருத:* - தெவிட்டாத அமுதமாக உள்ளவன்; "ஆரா அமுதே" - திருவாய். 5.8.1.

121. *சாச்வத ஸ்தாணு:* - என்றும் நிலைத்து இருப்பவன்.

122. *வராரோஹ:* - (வர + ஆரோஹ:) - முடிவாக அடையத் தக்கவன்; "அடியோங்கள் அடிக்குடில் வீடுபெற்று உயர்ந்தது காண்" - பல். 9.

123. *மஹா தபா:* - சிறந்த ஞானம் உடையவன்; "ஞானமூர்த்தி" - திருவாய். 4.3.8.

## சுலோகம் - 14

124. *ஸர்வக:* - எல்லாவற்றையும் தன்னிடம் வைத்துக் கொள்பவன்; "கார் ஏழ், கடல் ஏழ், மலை ஏழ், உலகு உண்டும் ஆரா வயிற்றான்" - திருவாய். 10.8.2.

125. *ஸர்வவித்* - எல்லாவற்றையும் அடைபவன்.

126. *பாநு:* - விளங்குபவன்.

127. *விஷ்வக் ஸேந:* - எங்கும் யாவரையும் காத்தலுக்கு உரிய சேனையை உடையவன்.

★128. *ஜநார்த்தந:* - பகைவர்களை வெல்பவன்; "வென்று பகை கெடுக்கும்" - பாவை. 24.

129. *வேத:* - வேதங்களை அருளியவன்; "பண்பு உடை வேதம் பயந்த பரனுக்கு" - திருவாய். 6.6.5.

130. *வேதவித்* - வேதம் வல்லவன். (திருநகரி திவ்யதேசப் பெருமாள் வேதராஜன்)

131. *அவ்யங்க:* - வேதத்தின் சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், கல்பம், ஜோதிஷம் என்னும் ஆறு அங்கங்களும் நிரம்பி இருப்பவன்.

132. *வேதாங்க:* - வேதங்களை அங்கங்களாக உடையவன்.

133. *வேதவித்* - வேத ஆராய்ச்சி செய்பவன்.

134. *கவி:* - எல்லாவற்றையும் பார்ப்பவன்.

## சுலோகம் - 15

135. *லோகாத்யக்ஷ:* (லோக + அத்யக்ஷ:) - பிரபஞ்ச நாயகன்.

136. *ஸுராத்யக்ஷ:* - தேவர்களின் தலைவன்; "அமரர்கள் அதிபதி" - திருவாய். 1.1.1.

137. *தர்மாத்யக்ஷ:* - (தர்ம + அத்யக்ஷ:) - தருமத்தின் தலைவன்.

138. *க்ருதாக்ருத:* - காரியமாயும், காரணமாயும் இருப்பவன்; "கருமமும் கரும பலனும் ஆகிய காரணன்" - திருவாய். 3.5.10.

139. *சதுராத்மா* - வாஸுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்நன், அநிருத்தன் என்று நான்கு வியூக மூர்த்திகளாக இருப்பவன்.

140. *சதுர் வ்யூஹ:* - ஜாக்ரத அவஸ்தை (விழிப்பு நிலை), ஸ்வப்ந அவஸ்தை (கனவு நிலை), ஸுஷுப்தி அவஸ்தை (ஆழ்ந்த உறக்க நிலை), துரிய அவஸ்தை (மயக்க நிலை) என்னும் நான்கு நிலைகளில் இருப்பவன்.

141. *சதுர் தம்ஷ்ட்ர:* - நான்கு கோரப் பற்களை உடையவன்.

142. *சதுர் புஜ:* - நான்கு திருத்தோள்களை உடையவன்; "ஈரிரண்டு மால் வரைத் தோள்" - பாவை. 30. (மால் - பெரிய; வரை - மலை)

## சுலோகம் - 16

143. *ப்ராஜிஷ்ணு:* - ப்ரகாசிப்பவன்.

144. *போஜநம்* - உணவுபோல் அனுபவிக்கத் தக்கவன்.

145. *போக்தா* - உண்பவன்; "என்னை முற்றப் பருகினான்" - திருவாய். 9.6.10.

146. *ஸஹிஷ்ணு:* - பொறுத்துக் கொள்பவன்; "தன் அடியார் திறத்தகத்துத் தாமரையாள் ஆகிலும் சிதகு உரைக்குமேல் என் அடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர்" - பெ.ஆ.தி. 4.9.2. (சிதகு - குற்றம்)

147. *ஜகதாதிஜ:* (ஜகத் + ஆதிஜ:) - உலக ஆரம்பத்தில் தோன்றியவன்; "ஆதி நீ; ஓர் அண்டம் ஆதி" - ச.வி. 34.

★148. *அநக:* - குற்றம் இல்லாதவன்; "அமலன்... விமலன்... நிமலன்... நின்மலன்... அரங்கத்து அம்மான்" - அ.ஆ.பி. 1.

149. *விஜய:* - வெற்றியை அருள்பவன். (திருப்புட்குழி திவ்யதேசப் பெருமாள் விஜயராகவன்)

150. *ஜேதா* - வெற்றியாளன்; "தொட்ட படை எட்டும் தோலாத வென்றியான்" - 3. தி.அ. 99. (தோலாத - தோல்வி அடையாத)

151. *விச்வ யோநி:* - ஜகத் காரணன்; "எல்லாப் பொருள்கட்கும் வித்து ஆய்" - திருவாய். 1.5.2.

152. *புனர்வஸு:* - ஜீவராசிகளில் மீண்டும் மீண்டும் அந்தராத்மாவாக வசிப்பவன்; "எல்லாப் பொருட்கும் அரு ஆகிய ஆதியை" - திருவாய். 9.4.8. (அரு - அந்தராத்மா)

## சுலோகம் - 17

153. *உபேந்த்ர:* (உப + இந்த்ர:) - இந்திரனின் தம்பி.

154. *வாமந:* - குறளன்; "சிறுமா மேனி நிமிர்த்த... திருக்குறளன்" - திருவாய். 8.10.3. (திருமாலின் வாமந அவதாரம்) (திருவாறன் விளை - ஆரமுளா திவ்யதேசப் பெருமாள் திருக்குறளப்பன்)

155. *ப்ராம்சு:* - உயர்ந்தவன், திருவிக்ரமனாகிய திருமால்; "ஓங்கி உலகுஅளந்த உம்பர் கோமான்" - பாவை. 17. (திருஊரகம் - காஞ்சிபுரம் திவ்யதேசப் பெருமாள் உலகளந்தப் பெருமாள்)

156. *அமோக:* - ஒவ்வொரு செயலையும் வீண்போகாமல் செய்பவன்.

★157. *சுசி:* - தூயவன்; "தூயானை" - பெ.தி. - 11.7.3.

158. *ஊர்ஜித:* - வலிமையுடையோன்; "வல்லானை" - பாவை. 15.

159. *அதீந்த்ர:* (அதி + இந்த்ர:) - இந்திரனிலும் மேலானவன்; "இந்திரற்கும், பிரமற்கும் முதல்வன்" - நெ.தா. 4.

160. *ஸங்க்ரஹ:* - அடியவர்க்கு எளியவன்; "எளிவரும் இயல்வினன்" - திருவாய். 1.3.2. (ஆய்ப்பாடியில் கண்ணன் நண்பர்களுடன் மாடுகள் மேய்த்தது, கோபியர்களுடன் கைகோத்து ஆடியது)

161. *ஸர்க:* - அவதாரங்கள் செய்பவன்.

162. *த்ருதாத்மா* - ஆத்மாக்களை உய்விப்பவன். (உய்விப்பவன் - வாழ்விப்பவன்) (திருவித்வக்கோடு - திருவிச்சிக்கோடு திவ்யதேசப் பெருமாள் உய்யவந்த பெருமாள்)

★163. *நியம:* - அடக்குபவன்.

★164. *யம:* - ஆள்பவன்; "ஆள்கின்ற எம்பெருமான்" - நா.தி. 11.3.

## சுலோகம் - 18

★165. *வேத்ய:* - அறியத் தக்கவன்.

★166. *வைத்ய:* - மருத்துவன், பிறவி நோய்க்கு மருந்து காண்பவன்.

★ 167. *ஸதாயோகீ* - எப்போதும் விழித்து இருப்பவன்; "உறங்குவான்போல் யோகு செய்த பெருமான்" - திருவாய். 5.4.11.

★168. *வீரஹா* - அசுரர்களை வீழ்த்தியவன்; "வல்லரக்கர் உயிர் உண்ட மைந்தன்" - பெருமாள். 10.2.

169. *மாதவ:* - ஞானத்தைக் கொடுப்பவன்; "அறியாதன அறிவித்து அத்தா" - திருவாய். 2.3.2.

170. *மது:* - தேனினும் இனியன்; "தேனில் இனிய பிரானே" - பெ.ஆ.தி. 2.7.1.

171. *அதீந்த்ரிய:* சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் புலன்களுக்கு அப்பாற்பட்டவன்; "ஐம்புலன்கள் அறியாவகையால் அரு ஆகி நிற்கும்... ஈசனை" - திருவாய். 3.10.10. (அரு - உருவம் அற்ற)

172. *மஹா மாய:* - பெருமாயன்; "எண் இலாப் பெருமாயன்" - திருவாய். 7.1.1. (திருப்புலியூர் திவ்யதேசப் பெருமாள் மாயப்பிரான்)

173. *மஹோத்ஸாஹ:* - மிகுந்த ஊக்கமுடையவன்.

174. *மஹா பல:* - அதிக வலிமை உடையவன்; "மாற்றார்... உன் அடிபணியும்" - பாவை. 21. (மாற்றார் - விரோதிகள்)

## ஸ்லோகம் - 19

★175. *மஹா புத்தி:* - அளவற்ற ஞானம் உள்ளவன்; "எல்லை இல் ஞானத்தன்" - திருவாய். 3.10.8.

★176. *மஹா வீர்ய:* - மிக்க வீரியம் படைத்தவன்.

★177. *மஹா சக்தி:* - மிகுந்த திறமை உடையோன்.

★178. *மஹாத்யுதி:* - பேரொளியைக் கொண்டவன்; "மலியும் சுடர் ஒளிமூர்த்தி" - திருவாய். 5.2.11.

★179. *அநிர்தேச்யவபு:* - இணையற்ற திருமேனியன்; "ஈடும் எடுப்பும் இல் ஈசன்" - திருவாய். 1.6.3. (ஈடும் எடுப்பும் இல் - இணையும் உயர்வும் இல்லா)

180. *ஸ்ரீமாந்* - வருணிக்க இயலாத பேரழகன்.

★181. *அமேயாத்மா* - அளவிட முடியாதவன்; "அளத்தற்கு அரியாய்" - பெ.தி. 3.8.1.

182. *மஹாத்ரித்ருத்* - பெரிய மலையைத் தாங்குபவன்; "வரை எடுத்த தோளாளா" - பெ.தி. 3.6.5.

## ஸ்லோகம் - 20

★183. *மஹேஷ்வாஸ:* - சரமழை பொழிபவன்; "சிலை மலி செஞ் சரங்கள் செல உய்த்த நங்கள் திருமால்" - பெ.தி. 11.4.7. (சிலை - வில்; சரம் -அம்பு) (திருப்புள்ளம் பூதம்குடி திவ்யதேசப் பெருமாள் வல்வில் ராமன்)

184. *மஹீபர்த்தா* - பூமியைத் தாங்குபவன்; "எயிற்றிடை மண்கொண்ட எந்தை" - பெ.ஆ.தி. 5.2.3.

185. *ஸ்ரீநிவாஸ:* - திரு மா மகள் மார்பன்; "பூ ஆர் திரு மா மகள் புல்கிய மார்பா" - பெ.தி. 4.7.9. (பூஆர் - அழகு பொருந்திய) (திருவல்லவாழ் - திருவல்லா திவ்யதேசப் பெருமாள் திருவாழ்மார்பன்)

186. *ஸதாம் கதி:* - பக்தர்களுக்கு புகலிடம் ஆனவன்; "புகல் ஒன்று இல்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" - திருவாய் - 6.10.10.

187. *அநிருத்த:* - தடையற்றவன்; "மன் அடங்க மழு வலங்கைக் கொண்ட இராமநம்பி" (பரசுராமன்) - பெ.ஆ.தி. 5.4.6. (மழு - கோடரி)

188. *ஸுராநந்த:* - தேவர்களை மகிழ்விப்பவன்.

189. *கோவிந்த:* - தேவர்களின் துதிமொழிகளை ஏற்பவன்; "எந்நாளும் நின்று இமையோர்கள் ஏத்தி" - திருவாய். 10.6.6.

190. *கோவிதாம்பதி:* - ஞானிகள் நாயகன்; "மூதறிவாளர் முதல்வன்" - பெ.ஆ.தி. 5.2.2.

ஸ்லோகம் - 21

191. *மரீசி:* - ஒளி மயமானவன்; "கிளர் ஒளி மாயனை" - திருவாய். 3.10.10.

192. *தமந:* - அடங்கச் செய்பவன்.

193. *ஹம்ஸ:* - அன்னப் பறவையாய் அவதாரம் செய்தவன்.

194. *ஸுபர்ண:* - அழகிய சிறகுகளை உடையவன்.

195. *புஜகோத்தம:* - அரவணைமேற் பள்ளிகொண்ட மேலோன். (புஜங்கம் - உரகம் - அரவம் - பாம்பு) (திருக்கோட்டியூர் திவ்யதேசப் பெருமாள் உரகமெல்லணையான்)

196. *ஹிரண்யநாப:* - பொன்மயமான நாபியை உடையவன்.

197. *ஸுதபா:* - தெளிந்த ஞான வடிவன்; "ஞானச்சுடர் ஒளிமூர்த்தி" - திருவாய். 3.10.9.

198. *பத்மநாப:* - தாமரையைப் போன்ற சிவந்த கொப்பூழை உடையவன்; "அலர் எடுத்த உந்தியான்" - 3. தி.அ. 97. (திருவனந்தபுரம் திவ்யதேசப் பெருமாள் அனந்த பத்மநாபன்)

199. *ப்ரஜாபதி:* - உயிர்களின் தலைவன்.

ஸ்லோகம் - 22

200. *அம்ருத்யு:* - மரணம் தடுப்பவன்.

201. *ஸர்வத்ருக்* - எல்லாவற்றையும் பார்ப்பவன்.

202. *ஸிம்ஹ:* - சீற்றமும் அருளும் ஒருங்கே அமைந்த சிங்கப்பிரான். (சிங்கம் யானைமேல் (ஹிரணியன்) சீறினாலும், குட்டிக்கு (பிரகலாதன்) முலை உண்ணலாம்படி இருந்தவன் நரசிம்மன்)

203. *ஸந்தாதா* - பக்தர்களைத் தன்னிடம் சேர்த்துக் கொள்பவன்; "அடியவரை ஆட்கொள்வான்" - பெ.ஆ.தி. 4.9.3.

204. *ஸந்திமாந்* - பக்தர்களின் சேர்க்கை உடையவன்; "உன்தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது" - பாவை. 28.

205. *ஸ்திர:* - அசைவு இல்லாதவன்; "நிலைபேரான் என் நெஞ்சத்து, எப்பொழுதும்" - திருவாய். 10.6.6.

206. *அஜ:* - பிறப்பு அற்றவன்; "பிறப்பிலி" - திருவாய். 3.5.6.

207. *துர்மர்ஷண:* - பகைவர்களால் எதிர்க்க முடியாதவன்.

208. *சாஸ்தா* - தண்டிப்பவன்.

209. *விச்ருதாத்மா* - வியந்து கேட்கத்தக்க சரித்திரம் உடையவன்; "அளந்து இட்ட தூணை அவன் தட்ட, ஆங்கே வளர்ந்திட்டு வாள் உகிர்ச்சிங்க உருவாய் உளந் தொட்டு, இரணியன் ஒண் மார்வு அகலம் பிளந்திட்ட" (நரசிம்மன்) - பெ.ஆ.தி. 1.6.9.

★210. *ஸுராரிஹா* - தேவர்களின் எதிரிகளை மாய்த்தவன்; "ஆழ் துயர் செய்து, அசுரரைக் கொல்லுமாறே" - திருவாய். 7.4.6.

### சுலோகம் - 23

211. *குருர்குருதம:* - பரமகுரு; "பீதக ஆடைப் பிரானார் பிரம குருவாகி வந்து" - பெ.ஆ.தி. 5.2.8.

212. *தாம* - எல்லாவற்றையும் தாங்குபவன்.

★213. *ஸத்ய:* - அடியார்களுக்கு நல்லவன்; "தொண்டர்க்கு இனியானை" - பெ.தி. 11.7.2.

214. *ஸத்ய பராக்ரம:* - வஞ்சனை அற்ற ஆற்றல் உள்ளவன்.

215. *நிமிஷ:* - (பாகவத விரோதிகளை) நோக்காதவன்.

216. *அநிமிஷ:* - (அடியார்களைத்) திருக்கண் சாத்துபவன்.

217. *ஸ்ரக்வீ* - (வைஜயந்தி என்னும்) மாலையை அணிந்தவன்; "வனமாலை மார்வன்" - பெருமாள். 2.1. (வனமாலை - திருத்துழாய் மாலை)

218. *வாசஸ்பதி:* - சொல் வல்லவன்.

219. *உதாரதீ:* - பரந்த அறிவுடையோன்; "பவர்கொள் ஞானவெள்ளச் சுடர்மூர்த்தி" - திருவாய். 2.2.6. (பவர் - பரப்பு)

**சுலோகம் - 24**

220. *அக்ரணீ:* - அடியார்களை உயர்கதிக்கு அருளுவோன்; "பண்டு தொண்டு செய்தாரை மண்மிசை மேவி ஆட்கொண்டு போய், விசும்பு ஏறவைக்கும் எந்தை" - பெ.தி. 2.1.4. (விசும்பு - ஆகாயம்)

221. *க்ராமணீ:* - (தேவர்கள்) தலைவன்; "தேவாதி தேவபெருமான்" - திருவாய். 2.8.5.

222. *ஸ்ரீமாந்* - பெருமையில் குறையாதவன்; "பேராளன்" - பெ.தி. 6.6.9.

★223. *ந்யாய:* - நீதி நெறி வழுவாதவன்; "நீதி வானவன்" - அ.ஆ.பி. 1.

224. *நேதா* - பக்தர்கள் இச்சைப்படி நடப்பவன்.

225. *ஸமீரண:* - சுதந்திரன்.

226. *ஸஹஸ்ர மூர்த்தா* - ஆயிரம் திருமேனியன்; "முடிகள் ஆயிரத்தாய்" - திருவாய். 8.1.10.

227. *விச்வாத்மா* - எங்கும் நிறைந்தவன்.

228. *ஸஹஸ்ராக்ஷ:* - ஆயிரம் விழிகள் கொண்டவன்; "மலர்க்கண்கள் ஆயிரத்தாய்" - திருவாய். 8.1.11.

229. *ஸஹஸ்ரபாத்* - ஆயிரம் திருவடிகளை உடையவன்; "தாள்கள் ஆயிரத்தாய்" - திருவாய். 8.1.10.

**சுலோகம் - 25**

230. *ஆவர்த்தந:* - (சம்ஸார சக்கரத்தைச்) சுழற்றுபவன்.

231. *நிவ்ருத்தாத்மா* - எல்லாவற்றையும் கடந்தவன்.

232. *ஸம்வ்ருத:* - மறைந்துள்ளவன்; "கண்ணால் காணாத அவ் உரு" - பெ.தி.அ. 28.

233. *ஸம்ப்ரமர்த்தந:* - அறியாமை என்னும் இருளைப் போக்குபவன்; "மயர்வுஅற மதிநலம் அருளினன்" - திருவாய். 1.1.1.

234. *அஹஸ்ஸம்வர்த்தக:* - காலச்சக்கரத்தை உருட்டுபவன்; "கால சக்கரத்தாய்" - திருவாய். 7.2.7.

235. *வஹ்நி:* - அனைத்தையும் தாங்குபவன்; "எவையும் எவரும் தன்னுள்ளே ஆகியும் ஆக்கியும் காக்கும்" - திருவாய். 1.9.1.

236. *அநில:* - வாழ்வு அளிப்பவன்.

237. *தரணீதர:* - பூமியைத் தாங்குபவன்.

**சுலோகம் - 26**

238. *ஸுப்ரஸாத:* - அருள்மாகடல் (பேர் அருளாளன்); "உலகத்தவர் தொழுது ஏத்தும் பேர் அருளாளன்" - பெ.தி. 4.3.1. (திருச்சிறுபுலியூர் திவ்யதேசப் பெருமாள் அருள்மாகடல்)

★239. *ப்ரஸந்நாத்மா* - தெளிந்த அறிவுடையவன்; "தெள்ளியீர்" - பெ.தி. 8.2.1.

240. *விச்வஸ்ருக்* - உலகு எல்லாம் படைத்தவன்; "புவனி எல்லாம் படைத்தவனே" - பெருமாள். 8.2.

241. *விச்வபுக் விபு:* - எங்கும் பரவி, காப்பவன்.

★242. *ஸத்கர்த்தா* - நல்லோரைப் போற்றுபவன்.

★243. *ஸத்க்ருத:* - நல்லோரால் ஆராதிக்கப்படுபவன்; "தெள்ளியார் கை தொழும் தேவனார்" - பெ.தி. 9.7.9.

244. *ஸாது:* - நல்லோர் சொல்படி நடப்பவன்.

245. *ஜஹ்நு:* - (பக்தி அற்றவர்களுக்குத் தன்னை) மறைப்பவன்.

246. *நாராயண:* - எல்லா உயிர்களுக்கும் ஆதாரமாய் இருந்து காப்பவன்; "நாமம் ஆயிரம் ஏத்த நின்ற நாராயணா" - நா.தி. 2.1. (திருநாவாய், திருத்தண்கால் திவ்யதேசப் பெருமாள் நாராயணன்)

247. *நர:* - அழிவற்றவன்; "நரனே" - நா.தி. 2.1.

**சுலோகம் - 27**

248. *அஸங்க்யேய:* - எண்ணில் அடங்காதவன்; "எண் இல் தொல் புகழ் வானவர் ஈசனே" - திருவாய். 3.3.3.

249. *அப்ரமேயாத்மா* - எல்லாவற்றிலும் நிறைந்து இருப்பவன்; "பல்வகையும் பரந்த பெருமாள்" - திருவாய். 6.3.1.

250. *விசிஷ்ட:* - தனிச் சிறப்புடையவன்; "தனிமாப் புகழே எஞ்ஞான்றும் நிற்கும்படியாத் தான் தோன்றி" - திருவாய். 8.10.7.

251. *சிஷ்டக்ருத்* - பிறரை உயர்த்துபவன்.

★252. *சுசி:* - தூய்மையானவன்.

★253. *ஸித்தார்த்த:* - சகலமும் உடையவன்.

★254. *ஸித்த ஸங்கல்ப:* - எண்ணியபடி சாதிக்க வல்லவன்.

★255. *ஸித்தித:* - அணிமா, மஹிமா போன்ற சித்திகளை அருள்பவன். (அநுமன் ஸமுத்திரத்தைத் தாண்ட மலை போன்ற உருவம் எடுத்ததும், இலங்கை வாசலைத் தாண்டப் பூனையை ஒத்த உருவம் கொண்டதும் பகவானின் அநுக்கிரக பலனால் வரும் சித்திகள்)

★256. *ஸித்தி ஸாதந:* - தன்னை உபாசிப்பதை இன்பமாகத் தோன்றும்படிச் செய்பவன்.

## சுலோகம் - 28

257. *வ்ருஷாஹீ* - தன்னை அடியார் முதலில் அணுகும் தினமே மங்கள நாளாக இருக்கப் பெற்றவன்; "அடியேன் அரு வாழ்நாள் செல் நாள் எந்நாள்? அந்நாள் உனதாள் பிடித்தே செல்லக்காணே" - திருவாய். 5.8.3.

258. *வ்ருஷப:* - அருளைப் பொழிபவன்; "எல்லியும் காலையும் தன்னை நினைந்து எழ, நல்ல அருள்கள் நமக்கே தந்து அருள் செய்வான்" - திருவாய். 8.6.1. (எல்லி - இரவு)

259. *விஷ்ணு:* - எங்கும் பரந்து இருப்பவன்; "கரந்து எங்கும் பரந்தானை" - பெ.தி. 2.10.10. (கரந்து - ஒளிந்து)

260. *வ்ருஷபர்வா* - தன்னை அடைய வாழ்க்கை முறைகளை படிகளாக அமைத்திருப்பவன்.

261. *வ்ருஷோதர:* - அடியார்களின் நிவேதனத்தை வயிறார உண்பவன்.

262. *வர்த்தந:* - வளர்ப்பவன்; "அடியேனுக்கு உற்றான் ஆய், வளர்த்து" - பெ.தி. 8.9.7.

263. *வர்த்தமாந:* - அன்பர்களை வளர்ப்பதில் மகிழ்ந்து பூரிப்பவன்.

264. *விவிக்த:* - தனக்கே உரிய சிறப்பு உடையவன்.

265. *ச்ருதிஸாகர:* - வேதங்களுக்குப் புகலிடம் ஆனவன்.

## சுலோகம் - 29

★266. *ஸுபுஜ:* - அழகிய தோள்களை உடையவன்; "சுந்தரத் தோளுடையான்" - நா.தி. 9.1.

267. *துர்த்தர:* - தடுக்க முடியாதவன்; "வென்றி சேர் திண்மை, விலங்கல் மா மேனி" - பெ.தி. 9.1.4. (திண்மை - வலிமை)

★268. *வாக்மீ* - தன் வாக்கினால் ஆட்கொள்பவன்.

269. *மஹேந்த்ர:* - மகத்தான ஐச்வர்யம் உடையவன்.

270. *வஸுத:* - செல்வம் அருள்பவன்; "அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும் எம்பெருமான்" - பாவை. 17. (அம்பரம் - ஆடை)

271. *வஸு:* - தானே செல்வமாக இருப்பவன்; "நிதியினை" - கு.தா. 1. (திருக்கோளூர் திவ்யதேசப் பெருமாள் வைத்தமாநிதி)

272. *நைகரூப:* - பல வடிவினன்; "ஏகமூர்த்தி இருமூர்த்தி மூன்று மூர்த்தி பல மூர்த்தி ஆகி" - திருவாய். 4.3.3.

273. *ப்ருஹத் ரூப:* - பெரிய உருவம் உடையவன்; "பெருந்திசை அடங்கிட நிமிர்ந்தோன்" - பெ.தி. 9.1.8.

274. *சிபிவிஷ்ட:* - ஒளிக் கிரணங்களில் இருப்பவன்; "நீள்சுடர் இரண்டும்" - திருவாய். 3.4.1.

275. *ப்ரகாசந:* - விளங்கச் செய்பவன்.

## சுலோகம் - 30

276. *ஓஜஸ் தேஜோ த்யுதிதர:* - பராக்கிரமம், ஒளி, அழகு உடையவன்.

277. *ப்ரகாசாத்மா* - ஒளி படைத்தவன்; "ஒளி மணிவண்ணன்" - திருவாய். 3.4.8.

278. *ப்ரதாபந:* - அனலாய் வாட்டுபவன்; "கஞ்சன் வயிற்றில் நெருப்பு என்ன நின்ற நெடுமால்" - பாவை. 25. (கஞ்சன் - கம்ஸன்)

279. *ருத்த:* - சகலமும் நிறைந்தவன்.

280. *ஸ்பஷ்டாக்ஷர:* - தெளிவான வேத எழுத்துக்களாய் உள்ளவன்.

★281. *மந்த்ர:* - மந்திரங்களாய் இருப்பவன்.

★282. *சந்த்ராம்சு:* - சந்திர ஒளி உள்ளவன்; "திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற் போல்" - பாவை. 22.

★283. *பாஸ்கரத்யுதி:* - சூரிய ஒளி உடையவன்; "சுடர்கள் இரண்டு ஆய்" - திருவாய். 6.9.1. (சுடர் - சூரிய, சந்திரர்)

## சுலோகம் - 31

★284. *அம்ருதாம் சூத்பவ:* (அம்ருத + அம்சு + உத்பவ:) - அமிர்த கதிரையுடைய சந்திரனுக்குப் பிறப்பிடமாய் உள்ளவன்.

285. *பாநு:* - சூரியன்; "ஞாயிறுமாய்" - திருவாய். 7.8.2.

286. *சச பிந்து:* - தீயவர்களை அழிப்பவன்; "தீ மனத்து அரக்கர் திறல் அழித்தவனே" - பெ.தி. 4.3.5.

287. *ஸுரேச்வர:* (ஸுர + ஈச்வர:) - தேவர்கள் தலைவன்; "தேவாதி தேவனை" - பாவை. 8. (திருநைமி சாரண்யம், திருவழுந்தூர் - தேரழுந்தூர் திவ்யதேசப் பெருமாள் தேவாதி ராஜன்)

288. *ஔஷதம்* - மருந்தாய் உள்ளவன்; "வினையேன் வினைதீர் மருந்தே" - திருவாய். 7.1.4.

★289. *ஜகதஸ்ஸேது:* - உலகில் பாலமாய் இருப்பவன்.

★290. *ஸத்ய தர்ம பராக்ரம:* - சத்தியத்தையும் தருமத்தையும் பலமாகக் கொண்டவன்.

## சுலோகம் - 32

291. *பூத பவ்ய பவந்நாத:* - கடந்த, நிகழ், வரும் காலங்களிலும் உள்ளவற்றிற்குத் தலைவன்; "போகின்ற காலங்கள், போய காலங்கள், போகு காலங்கள் தாய், தந்தை, உயிர் ஆகின்றாய்" - திருவாய். 2.6.10.

292. *பவந:* - எல்லாக் காலங்களிலும் இடங்களிலும் செல்பவன்; "காற்று எல்லாம் யானே" - திருவாய். 5.6.3.

★293. *பாவந:* - தூய்மை செய்பவன்.

294. *அநல:* - கருணை புரிவதில் திருப்தி அடையாதவன்; "உன் அடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி நீ" - பெ.தி.அ. 53.

295. *காமஹா* - ஆசைகளைக் களைபவன்.

296. *காமக்ருத்* - தன்னிடம் ஆசைகளை வளர்ப்பவன்.

297. *காந்த:* - விரும்பப்படுபவன்; "இன் அமுதே" - திருவாய். 7.1.7.

298. *காம:* - ஆசைப்படத் தக்கவன்.

299. *காமப்ரத:* - வேண்டியவற்றை அளிப்பவன்; "வேண்டிற்று எல்லாம் தரும் கோது இல் என் வள்ளல்" - திருவாய். 3.9.5. (கோது - குற்றம்)

★300. *ப்ரபு:* - சீரிய குணங்களால் பிறர் மனம் கவரும் பெரியோன்; "கண்டவர்தம் மனம் வழங்கும் கண்ணபுரத்து அம்மானை" - பெ.தி. 8.1.9. (வழங்கும் - கொண்டாடும்)

### ஸுலோகம் - 33

301. *யுகாதிக்ருத்:* - யுக ஆரம்பப் படைப்பாளன்.

302. *யுகாவர்த்த:* - யுகங்களை மீண்டும் படைப்பவன்; "கிரேத, திரேத, துவாபர, கலியுகம் இவை நான்கும் முன் ஆனாய்" - பெ.தி. 7.7.6.

303. *நைகமாய:* - பற்பல மாயைகளை உடையவன்; "மாயக்கூத்தா" - திருவாய். 8.5.1.

304. *மஹாசந:* - யாவற்றையும் உண்பவன்; "அனைத்தையும் உண்ட மா வயிற்றோன்" - பெ.தி. 1.4.9.

305. *அத்ருச்ய:* - காண முடியாதவன்; " கட்கிலீ " (கட்கு+இலீ) - திருவாய். 7.2.3. (கட்கிலீ - கண்ணுக்குத் தோன்றாதவன்)

306. *வ்யக்தரூப:* - தெளிவாகத் தெரியும் திருமேனியன்; "தெளிந்தொழிந்த பைந்துழாயன்" - திருவாய். 2.8.6.

307. *ஸஹஸ்ரஜித்* - ஆயிரம் யுகங்களை வெல்பவன்.

308. *அநந்தஜித்* - எண்ணற்ற வெற்றியாளன்.

### ஸுலோகம் - 34

309. *இஷ்டோவிசிஷ்ட:* (இஷ்ட:+அவிசிஷ்ட:) எல்லோராலும் விரும்பப்படும் பெருந்தகை.

310. *சிஷ்டேஷ்ட:* - பெரியோர்களால் விரும்பப்படுபவன்.

311. *சிகண்டீ* - மயில் இறகைச் சின்னமாக சிரசில் பூண்டவன்.

312. *நஹுஷ:* - மாயையால் உயிர்களைக் கட்டுபவன்.

313. *வ்ருஷ:* - அருள் மழை பொழிபவன்; "அருள் ஆளும் அம்மான்" - திருவாய். 8.4.10.

314. *க்ரோதஹா* - சினம் ஒழித்தவன்.

315. *க்ரோதக்ருத்* - கோபம் கொள்பவன்.

316. *கர்த்தா* - வெட்டுபவன்; "மழுவால் அழித்திட்டவன்" - பெ.தி. 10.6.6. (மழு - கோடாலி)

317. *விச்வபாஹு:* - உதவும் திருக்கரங்களை உடையவன்.

318. *மஹீதர:* - பூமியைத் தாங்குபவன்.

**சுலோகம் - 35**

★319. *அச்யுத:* - தன் நிலை தவறாதவன்; "அச்சுதா" - மாலை. 2.

★320. *ப்ரதித:* - புகழ் பெற்றவன்; "உலப்பு இல் கீர்த்தி அம்மானே" - திருவாய். 6.10.1.

321. *ப்ராண:* - உயிராய் இருப்பவன்; "உலகுக்கே ஓர் உயிரும் ஆனாய்" - திருவாய். 6.9.7.

322. *ப்ராணத:* - பலம் அளிப்பவன்.

323. *வாஸவாநுஜ:* (வாஸவ + அநுஜ:) - இந்திரனுக்குப் பின் பிறந்தவன்.

324. *அபாம்நிதி:* - கடல்களுக்கு ஆதாரமானவன்.

325. *அதிஷ்டாநம்* - அடித்தளமாய் இருப்பவன்.

326. *அப்ரமத்த:* - விழிப்புடன் இருப்பவன்.

327. *ப்ரதிஷ்டித:* - நிலைபெற்று இருப்பவன்.

**சுலோகம் - 36**

328. *ஸ்கந்த:* - அசுரர்களை அழிப்பவன்; "அசுரரைக் கொன்றேனே" - திருவாய். 5.6.5.

329. *ஸ்கந்த தர:* - கந்தக் கடவுளைத் தாங்குபவன்.

330. *துர்ய:* - புவனம் (உலகம்) தாங்குபவன்.

331. *வரத:* - வரங்களைத் தருபவன். (திருக்கச்சி - காஞ்சிபுரம் திவ்யதேசப் பெருமாள் வரதராஜன்)

332. *வாயுவாஹந:* - காற்றை இயக்குபவன்.

333. *வாஸுதேவ:* - எங்கும் வியாபித்து விளையாடுபவன்.

334. *ப்ருஹத் பாநு:* - பரஞ்சுடர்; "பரம் சுடர் உடம்பு ஆய்" - திருவாய். 6.3.7.

335. *ஆதிதேவ:* - ஆதியங்கடவுள்; "ஆதி ஆன ஆதி நீ" - ச.வி. 8. (திருக்குருகூர் - ஆழ்வார் திருநகரி திவ்யதேசப் பெருமாள் ஆதிநாதன்)

336. *புரந்தர:* - திரிபுரம் எரித்தவன்; "திரிபுரம் மூன்று எரித்தானும்" - பெ.தி. 2.8.1.

## சுலோகம் - 37

337. *அசோக:* - துயர் துடைப்போன்; "உறுதுயர் தீர்த்த அதகன்" - பெ.ஆ.தி. 2.1.9. (உறுதுயர் - மிக்க துன்பம்; அதகன் - வலிமையாளன்)

338. *தாரண:* - பகைவர், கள்வர், பிணிகள் போன்ற துயரங்களில் இருந்து கரை சேர்ப்பவன்; "பிறிவிக் கடலுள் நின்று, நான் துளங்க... ஆஆ என்று அருள் செய்து" - திருவாய். 5.1.9. (துளங்க - வருந்த)

339. *தார:* - காப்பவன்; "இன் அருள் செய்வாய்" - பெ.தி. 11.8.9.

★340. *சூர:* - சமர்த்தன்; "சென்று அங்குத் தென்னிலங்கை செற்றாய்" - பாவை. 24. (செற்றாய் - அழித்தாய்)

341. *சௌரி:* - சூரன் என்னும் வஸுதேவனின் புதல்வன்.

342. *ஜநேச்வர:* - மக்கள் தலைவன்.

★343. *அநுகூல:* - அடியார்கள் அடைய எளியவன். (மஹாவீரன் ஆயினும் தான் என்னும் செருக்கு இல்லாதவன் ஸ்ரீராமன். கண்ணனுக்கும் இது பொருந்தும்)

344. *சதாவர்த்த:* - பல அவதாரங்கள் எடுப்பவன்; "மீனோடு ஆமை, கேழல், அரி, குறள் ஆய், முன்னும் இராமனாய்; தான் ஆய்; பின்னும் இராமனாய்,... தாமோதரன் ஆய், கற்கியும் ஆனான் - தன்னை" - பெ.தி. 8.8.10. (பரசுராமன்; ராமன்; பலராமன்)

345. *பத்மீ* - தாமரையைக் கையில் கொண்டவன்; "தாமரை நாள் மலர்க் கையன்" - திருவாய். 6.6.6. (நாள் - அன்று மலர்ந்த)

★346. *பத்ம நிபேக்ஷண:* - தாமரை பூப்போன்ற இனிய நோக்கு உடையவன்.

## சுலோகம் - 38

347. *பத்மநாப:* - தாமரை மலர் போன்ற அழகிய நாபியை உடையவன்.

★348. *அரவிந்தாக்ஷ:* - தாமரைக் கண்ணன்; "பங்கயக் கண்ணன்" - திருவாய். 3.4.3. ("ராம: கமல பத்ராக்ஷ:" என்று அநுமன் அசோகவனத்தில் பிராட்டியிடம் சொன்னான்). (திருத்தொலைவில்லி மங்கலம் திவ்யதேசப் பெருமாள் அரவிந்தலோசனன்)

349. *பத்மகர்ப்ப:* - இதய கமலவாசி.

350. *சரீரப்ருத்* - சரீரத்தைத் தாங்குபவன்; "திசை, மண், நீர், எரி முதலா உரு ஆய் நின்றவனை" - பெ.தி. 7.6.7.

351. *மஹர்த்தி:* - அளவற்ற செல்வத்தை உடையவன்.

352. *ருத்த:* - விருத்தி அடைபவன்.

353. *வ்ருத்தாத்மா* - விருத்தியுற்ற பரமாத்மா.

354. *மஹாக்ஷ:* - கருடவாஹனன்; "பறவை ஏறு பரமபுருடா" - பெ.ஆ.தி. 5.4.2.

355. *கருடத்வஜ:* - கருடக்கொடியான்; "கருளக் கொடியானே" - பெ.ஆ.தி. 5.1.1.

**சுலோகம் - 39**

356. *அதுல:* - ஒப்பு இல்லாதவன்; "ஒப்பு இலா என் அப்பா" - பெ.தி. 8.1.2. (திருவிண்ணகர் திவ்யதேசப் பெருமாள் ஒப்பிலி அப்பன்)

357. *சரப:* - அழிப்பவன்.

358. *பீம:* - அச்சமூட்டுபவன்; "செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா" - பாவை. 20. (செற்றார் - சத்ரு; வெப்பம் - பயம்)

359. *ஸமயஜ்ஞ:* - உரியதை உரிய தருணத்தில் உணர்ந்து செயல்படுபவன்.

360. *ஹவிர்ஹரி:* - வேள்விகளில் அளிக்கப்படும் ஹவிர் பாகங்களை (அவிசுகள்) ஏற்பவன்.

361. *ஸர்வலக்ஷண லக்ஷண்ய:* - சகல லக்ஷணங்களும் (சிறப்பு இயல்புகள்) பொருந்திய லக்ஷணவான்.

362. *லக்ஷ்மீவாந்* - திருவாழ்மார்பன். (திருவண்பரிசாரம் - திருப்பதிசாரம், திருவல்லவாழ் - திருவல்லா திவ்யதேசப் பெருமாள் - திருவாழ்மார்பன்)

363. *ஸமிதிஞ்ஜய:* - (உய்ய வழிகாட்டும்) வெற்றியாளன்.

## சுலோகம் - 40

364. *விக்ஷர:* - (அன்பர்களிடத்தில் கருணை புரிவதில்) குறையாதவன்.

365. *ரோஹித:* - சிவந்த நிறமுடையவன்; "திருச்செய்ய கமலக் கண்ணும், செவ்வாயும், செவ்வடியும், செய்யகையும்,... திருச்செய்ய முடியும்" - திருவாய். 8.4.7.

366. *மார்க்க:* - பக்தர்களால் தேடப்படுபவன்.

367. *ஹேது:* - காரணன்.

368. *தாமோதர:* - கயிற்றுத் தழும்பு வயிறன்; "கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுஉண்ணப் பண்ணிய பெருமாயன்" - க.சி.தா. 1.

369. *ஸஹ:* - பொறுமைசாலி.

370. *மஹீதர:* - ஞாலம் (பூமி) தாங்குபவன்.

371. *மஹாபாக:* - அளவற்ற சௌபாக்கியம் உடையவன்.

372. *வேகவாந்* - வேகமான செயல்கள் உடையவன்; "பேய்முலை உண்டு, சகடம் பாய்ந்து, மருது இடை போய் முதல் சாய்த்து, புள் வாய் பிளந்து, களிறு அட்ட" - திருவாய். 5.3.8.

373. *அமிதாசந:* - தீராத பசி உடையவன்.

## சுலோகம் - 41

374. *உத்பவ:* - பந்தத்தை விலக்குபவன்.

375. *க்ஷோபண:* - கலக்குகிறவன்.

376. *தேவ:* - விளையாடுபவன்; "பலபல மயக்குகளால் இன்புறும் இவ் விளையாட்டு உடையானை" - திருவாய். 3.10.7.

377. *ஸ்ரீகர்ப்ப:* - திருமகளை எப்போதும் கர்ப்பம்போல் காப்பவன்.

378. *பரமேச்வர:* - எல்லாவற்றிற்கும் மேலான ஈசுவரன்; "தெய்வக் கோமானே" - திருவாய். 6.10.2.

379. *கரணம்* - அடியார்கள் தன்னை அடைவதற்குத் தானே கருவியாக இருப்பவன்.

380. *காரணம்* - இயக்குபவன்; "காரணம், கிரிசை, கருமம் இவை முதல்வன்" - திருவாய். 2.7.2.

381. *கர்த்தா* - செயல்புரிபவன்; "செய்கின்ற கிதி எல்லாம் யானே" - திருவாய். 5.6.4. (கிதி-கிரியை, செயல்) ஸ்ரீராமன் தந்தை சொல்லை சிரசில் ஏற்றான்; ஜடாயுவின் ஈமச் சடங்குகளைச் செய்தான்; விபீஷணனுக்கு அரசு அளித்தான்)

382. *விகர்த்தா* - (அடியார்களுக்காக) மாறுதல் அடைபவன்.

383. *கஹந:* - அறிவுக்கு எட்டாதவன்; "சிந்தைக்கும் கோசரம் அல்லன்" - திருவாய். 1.9.6. (கோசரம் - பொறி உணர்வு)

384. *குஹ:* - காப்பாற்றுவோன்; "சன்ம சன்மாந்தரம் காத்து" - திருவாய். 3.7.7.

**சுலோகம் - 42**

385. *வ்யவஸாய:* - நக்ஷத்திரங்களுக்கு ஆதாரமாய் இருப்பவன்.

386. *வ்யவஸ்தாந:* - கால தத்துவத்தை ஆள்பவன்.

387. *ஸம்ஸ்தாந:* - எல்லாம் தன்னிடம் முடிவு அடையும்படி இருப்பவன்.

388. *ஸ்தாநத:* - மேலான இடம் அளிப்பவன்; "அன்று சராசரங்களை வைகுந்தத்து ஏற்றி" - பெருமாள். 10.10.

389. *த்ருவ:* - நிலைத்து இருப்பவன்.

★390. *பரர்த்தி:* - உயர்ந்த குணங்கள் உடையவன்.

★391. *பரமஸ்பஷ்ட:* - காணத்தக்க மேன்மை உள்ளவன்; "காணப், பெரும் தோற்றத்து எம் காகுத்த நம்பிக்கு" - திருவாய். 6.6.9.

★392. *துஷ்ட:* - (உறவுகளால்) மகிழ்ச்சியாய் இருப்பவன்.

★393. *புஷ்ட:* - (நற்குணங்கள்) நிறைந்தவன்.

★394. *சுபேக்ஷண:* - அருட்பார்வை கொண்டவன்.

**சுலோகம் - 43**

★395. *ராம:* - நெஞ்சுக்கு இனியவன்; "தென் இலங்கைக் கோமானைச் செற்ற, மனத்துக்கு இனியானை" - பாவை. 12. (திருஅயோத்தி திவ்யதேசப் பெருமாள் ராமன்)

★396. *விராம:* - பிறரை ஓயச் செய்பவன்; "மாற்றாரை மாற்று அழிக்க வல்லானை மாயனை" - பாவை. 15.

★397. *விரத:* - ஆசை அற்று இருப்பவன்; "பார் ஆளும் படர் செல்வம் பரதநம்பிக்கே அருளி,... அருங்கானம் அடைந்தவனே" - பெருமாள். 8.5.

★398. *மார்க்க:* - (யோகிகளும்) தேடும்படியாக இருப்பவன்.

★399. *நேய:* - கட்டளை ஏற்பவன்; "சிற்றவை பணியால் முடி துறந்தானை" - பெ.தி. 2.3.1. (சிற்றவை - சிறிய தாய்)

★400. *நய:* - நல்வழி நடத்துபவன்.

★401. *அநய:* - அயலார்க்கு அணுக முடியாதவன்.

★402. *வீர:* - பகைவரை நடுங்கச் செய்பவன். (திருவள்ளூர் திவ்யதேசப் பெருமாள் வீரராகவன்)

★403. *சக்திமதாம் ச்ரேஷ்ட:* - சக்தி படைத்தவருள் சிறந்தவன்; "சினவிடையோன் சிலையிறுத்து... இராமன்" - பெருமாள். 10.3. (விடையோன் - காளை வாகனன், சிவன்; சிலை - தனுசு, வில்)

★404. *தர்ம:* - தருமமே உருவானவன்.

★405. *தர்ம விதுத்தம:* - அற முதல்வன்.

## சுலோகம் - 44

★406. *வைகுண்ட:* - அன்பர்களுக்கு வரும் இடையூறுகளை அகற்றித் தன்னிடம் சேர்த்துக்கொள்பவன்; "சார்ந்த இரு வல்வினைகளும் சரித்து, மாயப்பற்று அறுத்து, தீர்ந்து வீடு திருத்துவான்" - திருவாய். 1.5.10.

★407. *புருஷ:* - தூய்மை செய்பவன்; "பவித்திரனே" - பல். 10.

★408. *ப்ராண:* - உயிராய் இருப்பவன்; "எல்லா உலகும் உயிரும் தானே ஆய்" - திருவாய். 10.7.2.

★409. *ப்ராணத:* - உயிர் அளிப்பவன்.

★410. *ப்ரணம:* - வணங்கத் தக்கவன்; "இலை துணை... ஈர் ஐந்தலையான் ஈடு அழிக்க, கூர் அம்பன் அல்லால், குறை" - 4. தி.அ. 8.

411. *ப்ருது:* - பெரும் புகழாளன்; "நிகர் இல் புகழாய்" - திருவாய். 6.10.10.

412. *ஹிரண்ய கர்ப்ப:* - பொற் புதையல் போன்றவன்.

413. *சத்ருக்ந:* - பகையை அழிப்பவன்; "பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு" - பெ.தி. 2.3.1. (பற்றலர் - பகைவர்)

★414. *வ்யாப்த:* - (பக்தர்களிடம் வேறுபாடுகளின்றி) நிரம்பி இருப்பவன்.

★415. *வாயு:* - (தன்னைச் சிந்திப்போரைத் தேடிச்) செல்பவன்.

★416. *அதோக்ஷஜ:* - குறையாது இருப்பவன்.

## சுலோகம் - 45

★417. *ரிது: (ருது)* - (மனத்தினுள்) புகுபவன்; "என் மனம் புகுந்தாய்" - பெ.தி. 1.10.9.

★418. *ஸுதர்சந:* - தரிசனத்துக்கு இனியன்; "கண்ணுக்கு இனியானை" - பெ.ஆ.தி. 3.2.4.

★419. *கால:* - தன்னிடம் சேர்த்துக்கொள்பவன்.

★ 420. *பரமேஷ்டீ* - பரமபதவாசி; "பல்லாண்டு என்று பவித்திரனைப் பரமேட்டியை" - பல். 11.

★421. *பரிக்ரஹ:* - (தன்னைப் பற்றினவர்களையும் அவர்களைச் சேர்ந்தவற்றையும்) ஏற்றுக்கொள்பவன்; "அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் நல்-பாலுக்கு உய்த்தனன்" - திருவாய். 7.5.1.

422. *உக்ர:* - (அதர்மிகளிடம்) கொடியவன்.

423. *ஸம்வத்ஸர:* - பொருந்திப் புசிப்பவன்.

424. *தக்ஷ:* - விரைவில் முடிப்பவன்.

425. *விச்ராம:* - ஓய்விடமாய் இருப்பவன்; "தந்தனன் தன தாள் நிழலே" - திருவாய். 6.3.9. (தாள் - திருவடி)

426. *விச்வதக்ஷிண:* - நல்லவன் தீயவன் என்ற வேறுபாடு இன்றி நலம் நல்கும் நல்லான்.

## சுலோகம் - 46

427. *விஸ்தார:* - விரிவாக வெளிப்படுத்துகிறவன்.

428. *ஸ்தாவர ஸ்தாணு:* - மன அமைதியுடன் இருப்பவன்; "ஒரு குறைவு இலனே" - திருவாய். 3.10.1.

429. *ப்ரமாணம்* - ஆதாரமாக இருப்பவன்.

430. *பீஜமவ்யயம்* - அழியாத விதையாக இருப்பவன்; "தான் ஓர் உருவே தனி வித்து ஆய்" - திருவாய். 1.5.4.

431. *அர்த்த:* - (உத்தமர்களுக்கு அடையத்தக்க) பயனாய் இருப்பவன்; "ஆர்வமொடு நிச்சம் நினைவார்க்கு அருள் செய்யும்" - பெ.தி. 2.4.8.

432. *அநர்த்த:* - (அதர்மர்களுக்கு) பயனாக இல்லாதவன்.

433. *மஹா கோச:* - பெரிய செல்வத்தை உடையவன்; "செல்வத் திருமால்" - பாவை. 30.

434. *மஹா போக:* - போகங்கள் அனைத்தையும் அளிப்பவன்.

435. *மஹா தந:* - அளவற்ற செல்வம் உடையவன்; "செல்வ நாரணன்" - திருவாய். 1.10.8.

### சுலோகம் - 47

436. *அநிர்விண்ண:* - சோம்பல் அற்றவன்; "சோம்பாது, இப் பல் உருவை எல்லாம் படர்வித்த வித்தா" - பெ.தி.அ. 18.

437. *ஸ்தவிஷ்ட:* - அளவுபடாத பெரிய வடிவினன்.

438. *பூ:* - எல்லாவற்றையும் தாங்குபவன்.

439. *தர்ம யூப:* - தர்மத்தைத் தலைமையாக உடையவன்.

440. *மஹாமக:* - யாகத்தைத் தனக்கு அவயவமாக உள்ளவன்.

441. *நக்ஷத்ரநேமி:* - நக்ஷத்திரங்களை நடத்துபவன்.

442. *நக்ஷத்ரீ* - நக்ஷத்திர மண்டலத்தைத் தாங்குபவன்.

443. *க்ஷம:* - (அனைத்து உலகங்களையும் தாங்கும்) பொறுமையாளன்.

444. *க்ஷாம:* - வடிவில் சிறியவன்.

445. *ஸமீஹந:* - பிறரை இயங்கச் செய்பவன்; "நிறுத்தினான் தெய்வங்கள் ஆக" - திருவாய். 5.2.8.

### சுலோகம் - 48

446. *யஜ்ஞ:* - யாகமாய் (வேள்வி) இருப்பவன்; "வேள்வியாய்... ஆனான்" - பெ.ஆ.தி. 4.9.5.

447. *இஜ்ய:* - யாகத்தால் ஆராதிக்கப்படுபவன்.

448. *மஹேஜ்ய:* - தன்னை நேராக ஆராதிப்பதைச் சிறந்த ஆராதனமாக அங்கீகரிப்பவன்.

449. *க்ரது:* - எல்லாக் கர்மங்களாலும் வழிபடத்தக்கவன்.

450. *ஸத்ரம்* - நீண்ட காலம் செய்யப்படும் யாக ரூபியானவன்.

451. *ஸதாம்கதி:* - தன்னையே கதியாய் இருப்பவர்களுக்கு புகலிடமாக இருப்பவன்.

★452. *ஸர்வ தர்சீ* - எல்லாம் காண வல்லவன்.

★453. *நிவ்ருத்தாத்மா* - துறந்து இருப்பவன்.

★454. *ஸர்வஜ்ஞ:* - எல்லாம் அறிந்தவன்; "நிறைந்த ஞான மூர்த்தியாயை" - திருவாய். 4.7.7.

★455. *ஜ்ஞாநமுத்தமம்* - அறிவிற்கு இருப்பிடமானவன்; "கணக்கு இல் கீர்த்தி வெள்ளக் கதிர் ஞானமூர்த்தியினாய்" - திருவாய். 6.2.8.

## சுலோகம் - 49

★456. *ஸுவ்ரத:* - சிறந்த விரதம் பூண்டவன்.

★457. *ஸுமுக:* - மலர்ந்த திருமுகத்தன்; "காண்தகு தாமரைக் கண்ணன்" - திருவாய். 8.2.2.

458. *ஸூக்ஷ்ம:* - நுண்ணிய வடிவினன்; "எண்ணில் நுண் பொருள்" - திருவாய். 10.8.8.

459. *ஸுகோஷ:* - வேத ஒலியாய் இருப்பவன்.

★460. *ஸுகத:* - மேலான இன்பம் அருள்பவன்; "கொள்ள மாளா இன்பவெள்ளம் கோது இல் தந்திடும் என் வள்ளலேயோ" - திருவாய். 4.7.2. (கோது இல் - குற்றம் இல்லாத)

★461. *ஸுஹ்ருத்* - நல் மனத்தன்.

★462. *மநோஹர:* - வசீகரன். (திருஅன்பில் திவ்யதேசப் பெருமாள் வடிவழகிய நம்பி)

★463. *ஜிதக்ரோத:* - கோபத்தை அடக்குபவன்; "சீற்றம் இலாதானை" - பெ.ஆ.தி. 3.9.4.

★464. *வீரபாஹு:* - மிகுந்த பலம் உடைய கைகளை உடையவன்; "ஓடாத தோள் வலியன்" - பாவை. 18.

★465. *விதாரண:* - வெட்டுபவன்; "அசுரர் உயிர் எல்லாம் தகர்த்து" - திருவாய். 8.10.6.

## சுலோகம் - 50

466. *ஸ்வாபந:* - இனிய இயல்புகளால் மயங்கச் செய்பவன்.

467. *ஸ்வவச:* - தன் வசத்தன் / சுதந்திரன்.

468. *வ்யாபீ* - எங்கும் பரந்து இருப்பவன்; "பரந்து உளன்" - திருவாய். 2.8.8.

469. *நைகாத்மா* - பல உருவங்கள் உடையவன்; "பல் உருவாய் நிற்கும் மாயற்கு" - திருவாய். 6.6.10.

470. *நைக கர்மக்ருத்* - பல செய்கைகளைச் செய்பவன்.

471. *வத்ஸர:* - யாவற்றிலும் அந்தராத்மாவாக உள்ளே வசிப்பவன்; "உள்ளுவார் உள்ளிற்று எல்லாம் உடன் இருந்து அறிதி" - மாலை. 34. (உள்ளுதல் - நினைத்தல்; அறிதி - அறிவாய்)

★472. *வத்ஸல:* - பேரன்பு உடையவன்; "தனது அன்பர்க்கு அன்பு ஆகுமே" - திருவாய். 9.10.5. (சுவடுபட்ட இடத்தில் புல் மேயாத பசு, தான் ஈன்றபோது கன்றின் மேல் உள்ள வழும்பை அன்புடன் நாக்கால் விலக்குவது, தோஷத்தையும் (அழுக்கு) இனியதாகக் கொள்வது போன்றது அன்றோ!) (சுவடு - அடித்தடம், வழும்பு - வழுவழுப்பான நீர்ப்பண்டம்) சரணாகத வத்ஸலன் ஸ்ரீராமன். (திருநின்றவூர், திருக்கண்ணமங்கை ஆகிய இரு திவ்யதேசப் பெருமாள் பக்தவத்ஸலன்)

★473. *வத்ஸீ* - எல்லாப் பிரஜைகளையும் தன் குழந்தைகளாகக் கருதும் தன்மை உடையவன்.

474. *ரத்ந கர்ப்ப:* - வாரி வழங்கத் தக்க செல்வம் படைத்தவன்; "வைத்த மா நிதியாம் மதுசூதனனை" - திருவாய். 6.7.11.

475. *தநேச்வர:* - அவரவர்கள் விரும்பும் ஐசுவரியங்களை உடனே அளிப்பவன். (ஐசுவரியம் - செல்வம், பேறு, மேன்மை, ஆற்றல், கடவுள் தன்மை)

## சுலோகம் - 51

★476. *தர்மகுப்* - தருமத்தைக் காப்பவன்; "அறம் சுவர் ஆகிநின்ற அரங்கனார்" - மாலை. 6.

★477. *தர்மக்ருத்* - அறநெறியைப் பின்பற்றுபவன்.

478. *தர்மீ* - அறச் சிந்தனை உள்ளவன்.

479. *ஸத்* - எப்போதும் உள்ளவன்; "உளன் கண்டாய்" - மு.தி.அ. 99.

480. *ஸதக்ஷரம் (அக்ஷரம் ஸத்)* - எப்போதும் குறைவின்றி இருப்பவன்.

481. & 482. *அஸத்-க்ஷரம்* - துன்பம் தருபவன்.

★483. *அவிஜ்ஞாதா* - அடியார்களின் குற்றங்களைப் பொருட்படுத்தாதவன்; "என் அடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர்" - பெ.ஆ.தி. 4.9.2.

★484. *ஸஹஸ்ராம்சு:* - எல்லாம் அறிந்தவன்; "மிக்கஞான மூர்த்தி" -திருவாய். 4.7.10.

485. *விதாதா* - அடக்கி நடத்துபவன்.

486. *க்ருத லக்ஷண:* - தன் அடியார்களிடம் அடையாளம் இட்டிருப்பவன்.

## சுலோகம் - 52

487. *கபஸ்தி நேமி:* - ஒளிவீசும் திருச்சக்ரம் உடையவன்; "மின்னும் ஆழி அங்கையவன்" - பெ.தி. 3.1.2.

488. *ஸத்வஸ்த:* - தன்னை வழிபடுவோர் உள்ளத்தில் வசிப்பவன்; "என் மனக்கடலில் வாழவல்ல மாய மணாள நம்பி" - பெ.ஆ.தி. 5.4.9.

489. *ஸிம்ஹ:* - தண்டிப்பவன்.

490. *பூத மஹேச்வர:* - எல்லா உயிரினங்களுக்கும் மேலானவன்; "மூவர் முதல்வன் ஒரு மூவுலகு ஆளி" - திருவாய். 9.8.9.

491. *ஆதிதேவ:* - ஆதிநாதன்; "திருக்குருகூர் - அதனுள் நின்ற ஆதிப்பிரான்" - திருவாய். 4.10.1.

492. *மஹா தேவ:* - பெருந்தெய்வம்.

493. தேவேச: - தேவர்களின் தலைவன்; "உம்பர் கோமானே" - பாவை. 17.

494. தேவ *ப்ருத்* - தேவர்களைத் தாங்குபவன்.

495. குரு: - தேவர்களின் ஆசாரியன்; "அமரர்க்கும் அறிவியந்து" - திருவாய். 1.1.8.

## சுலோகம் - 53

496. *உத்தர:* - அசுரர்களால் உண்டாகும் ஆபத்திலிருந்து கரையேற்றுபவன்; "அசுரர் இராக்கதரை, இண்டக் குலத்தை எடுத்துக் களைந்த இருடிகேசன் - பல்.4. (இண்டர் - சண்டாளர்)

497. *கோபதி:* - வாக்குக்கு அதிபதி; "நாவினுள் நின்று மலரும் ஞானக் கலைகளுக்கு எல்லாம் ஆவியும் ஆக்கையும் தானே" - திருவாய். 1.9.8. (ஆக்கை - உடல்)

498. *கோப்தா* - எல்லா வித்தைகளையும் காப்பாற்றுகிறவன்.

499. *ஜ்ஞாநகம்ய:* - ஞானத்தினால் அறியத்தக்கவன்.

500. *புராதந:* - மிகப் பழமையானவன்.

501. *சரீர பூதப்ருத்* - சகல பூதங்களையும் சரீரமாகக் கொண்டு தாங்குபவன்; "எப்பொருளும் தான் ஆய்" - திருவாய். 2.5.4.

502. *போக்தா* - ஹவ்யம் (தேவபிண்டம்), கவ்யம் (பித்ரு பிண்டம்) எல்லாவற்றையும் புசிப்பவன்.

★503. *கபீந்த்ர:* - அரி (குரங்கு) குலத் தலைவன்; "குரக்கு - அரசு ஆவது அறிந்தோம்" - நா.தி. 3.4.

★504. *பூரிதக்ஷிண:* - அபரிமிதமான யாக தக்ஷிணைகளைக் கொடுப்பவன்; "ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான்" - பெ. ஆ.தி. 4.8.1.

## சுலோகம் - 54

★505. *ஸோமப:* - ஸோமபானம் பருகியவன. (ஸோமம் - தாவரக் கொடிவகை)

★506. *அம்ருதப:* - அமிர்தம் பருகுபவன்.

★507. *ஸோம:* - அமிர்தமாக இருப்பவன்; "பேணுவார் அமுதே" - திருவாய். 8.1.2.

★508. *புருஜித்* - பலரைப் பலவிதமாக வென்றவன். (உலகங்களை தன் ஸத்தியத்தினாலும், ஏழைகளைத் தானத்தினாலும், பெரியோர்களைப் பணிவிடைகளினாலும், போரில் பகைவர்களை வில்வலியினாலும் வெற்றி கொள்கிறான்)

★509. *புரு ஸத்தம:* - பெருமை வாய்ந்தவனாக இருப்பவன்.

★510. *விநய:* - தண்டித்துத் திருத்துபவன்; "திருத்திப் பணிகொள்ளவல்ல... அச்சுதனை" - திருவாய். 3.5.11.

★511. *ஜய:* - வெற்றியாளன்.

★512. *ஸத்ய ஸந்த:* - சொல் தவறாதவன்; "ஒன்றே உரைப்பான் ஒரு சொல்லே சொல்வான்" - பெ.ஆ.தி. 2.6.4.

★513. *தாசர்ஹ:* - அடைக்கலமாக இருப்பவன்; "அடியேன் ஆவி அடைக்கலமே" - விருத்தம். 85.

★514. *ஸாத்வதாம் பதி:* - பாகவத உத்தமர்களின் தலைவன்; "பதியே! பரவித் தொழும் தொண்டர் தமக்கு" - பெ.தி. 7.1.7. (பதி-தலைவன்)

## சுலோகம் - 55

★515. *ஜீவ:* - வாழவைப்பவன்; "உலகு தன்னை வாழ நின்ற நம்பீ" - பெ.ஆ.தி. 5.4.1.

★516. *விநயிதா* - இரக்ஷிப்பவன்; "காக்கும் இயல்வினன் கண்ண பெருமான்" - திருவாய். 2.2.9.

★517. *ஸாக்ஷீ* - கூர்ந்து கவனிப்பவன்; "உள்ளுவார் உள்ளிற்று எல்லாம் உடன் இருந்து அறிதி" - மாலை. 34. (உள்ளுவார் - நினைப்பவர்)

★518. *முகுந்த:* (மு - மோக்ஷம்; குந்த: - பாபத்தைப் போக்குபவன்) - முக்தி (மோக்ஷம்) அளிப்பவன்; "முத்தனார் முகுந்தனார்" - (ச.வி. 115.) (திருவேளுக்கை திவ்யதேசப் பெருமாள் முகுந்த நாயகன்)

★519. *அமித விக்ரம:* - அதி பராக்கிரமன்; "மராமரம் பைந்தாள் ஏழ் உருவ ஒரு வாளி கோத்தவில்லா" - திருவாய். 2.6.9. (மரா மரம் - ஆச்சா மரம்; உருவ - துளைக்க; வாளி - அம்பு)

520. *அம்போ நிதி:* - நீருக்குள் உள்ளவன்; "நீரில் வாழும் ஆமையான கேசவா" - ச.வி. 20. (கூர்ம அவதாரம்)

521. *அநந்தாத்மா* - ஆதிசேஷனின் ஆத்மாவாக இருப்பவன்.

522. *மஹோததிசய:* - பெருங்கடலில் பள்ளி கொண்டவன்; "வெள்ளத்து அரவில் துயில் அமர்ந்த வித்தினை" - பாவை. 6.

523. *அந்தக:* - பிரளய காலத்தில் சகலத்தையும் அடையாளமின்றி அழிப்பவன்; "எவரும் யாவையும் எல்லாப் பொருளும் கவர்வு இன்றித் தன்னுள் ஒடுங்க நின்ற... சுடர்மூர்த்தி" - திருவாய். 2.2.6. (கவர்வு - வருந்துதல்)

## சுலோகம் - 56

524. *அஜ:* - 'அ' என்னும் அகாரத்துப் பொருளாகிய நாராயணன்.

★525. *மஹார்ஹ:* - குற்றேவல் (அந்தரங்கக் கைங்கரியம்) புரிதற்கு உரியவன்; "நீ குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது" - பாவை. 29.

★526. *ஸ்வாபாவ்ய:* - தியானத்துக்கு உரிய சுவாமி (எஜமானன்); "தொண்டர் - தங்கள் சிந்தையுள் முளைத்து எழுந்த தீம் கரும்பினை" - பெ.தி. 2.5.1. (தீம் - இனிய)

★527. *ஜிதாமித்ர:* - (உள் மற்றும் வெளிப்) பகைவர்களை வென்றவன்.

528. *ப்ரமோதந:* - ஆனந்தமாய் இருப்பவன்.

529. *ஆநந்த:* - ஆனந்த வடிவன்.

530. *நந்தந:* - ஆனந்தம் அளிப்பவன்.

531. *நந்த:* - எல்லாம் நிரம்பியவன்.

★532. *ஸத்யதர்மா* - தர்மத்தில் உண்மையுடன் இருப்பவன்.

533. *த்ரிவிக்ரம:* - மூன்று அடிகளால் மூன்று உலகங்களையும் அளந்தவன்; "மாவலியை மூவடிமண் கொண்டு அளந்தான்" - பெ.தி. 11.5.10. (வாமன அவதாரம்). (திருக்கோவலூர், சீர்காழி திவ்யதேசப் பெருமாள் திரிவிக்கிரமன்)

## சுலோகம் - 57

534. *மஹர்ஷி:* - பெரிய ஞானி; "மெய்ஞ்ஞான வேதியனை" - திருவாய். 3.1.11.

535. *கபிலாசார்ய:* - கபில முனிவராகத் தோன்றியவன்.

★536. *க்ருதஜ்ஞ:* - நற்செயல்களையே அறிபவன்.

537. *மேதிநீ பதி:* - பூபதி.

538. *த்ரிபத:* - ப்ரணவத்தில் (ஓம்) உள்ள மூன்று பதங்களாலும் (அ, உ, ம) சொல்லப்படுபவன்; "மூன்று எழுத்து ஆய முதல்வனே" - பெ.ஆ.தி. 4.10.4.

539. *த்ரிதசாத்யக்ஷ:* - முப்பத்து முக்கோடி தேவர்களைக் காப்பாற்றியவன்; "முப்பத்து மூவர் அமரர்க்கு முன் சென்று கப்பம் தவிர்க்கும் கலியே" - பாவை 20. (கப்பம் - துன்பம்)

540. *மஹாச்ருங்க:* - (கோரப் பல்லாகிய) பெரிய கொம்பை உடையவன்; "ஓர் ஏனம் ஆய்ப் புக்கு இடந்தான்" - பெ.தி. 11.76. (ஏனம் - பன்றி; வராக அவதாரம்) (திருவிடந்தை திவ்யதேசப் பெருமாள் லக்ஷ்மிவராகன்; திருமலை திருப்பதியும் ஒரு வராக ஸ்தலமே)

541. *க்ருதாந்தக்ருத்* - யமனைப் போன்ற ஹிரண்யாக்ஷனைக் (அசுரன்) கொன்றவன்.

**சுலோகம் - 58**

542. *மஹாவராஹ:* - பூவராகம் (திருமாலின் பன்றி அவதாரம்); "கோல வராகம் ஒன்றாய்" - திருவாய். 10.10.7.

543. *கோவிந்த:* - பூமியை மீண்டும் அடைந்தவன் (கோ - பூமி; விந்த: - அடைந்தவன்); "எம்மான் என் கோவிந்தனே" - திருவாய். 2.7.3. திருவேங்கடமுடையான் திருத்தலம் ஆன திருமலை திருப்பதியில் கோஷமிடப்படும் திருநாமம் "கோவிந்த" நாமமே ("மொய்த்த வல்வினையுள் நின்று, மூன்று எழுத்து உடைய பேரால் கத்திரபந்தும் அன்றே பராங்கதி கண்டுகொண்டான்" - மாலை. 4.); கோவிந்த பதத்தில் உள்ள 'ந்' எழுத்துக்கு எண்ணிக்கை கிடையாது. ஆக இந்தத் திருநாமம் ஒரு மூன்று எழுத்துத் திருநாமம்.

★544. *ஸுஷேண:* - திவ்ய ஆயுதங்கள் கொண்ட திருமேனியன்; "மாசூணாச் சுடர் உடம்பு ஆய்" - திருவாய். 3.1.8. (மாசூணா - மாசு அடையாத) (சுடர் - பிரகாசம்)

545. *கநகாங்கதீ* - பொற்றொடி (பொன்னால் ஆகிய தோள்வளை) முதலான அணிகலன்கள் அணிந்தவன்; "பீதக ஆடை, முடி, பூண் முதலா மேதகு பல்கலன் அணிந்து" - ஆசிரியம். 1.

546. *குஹ்ய:* - மறைக்கப்பட்டவன்.

★547. *கபீர:* - ஞானம், ஐசுவரியம் முதலிய அளவற்ற குணங்களால் மேலோங்கி இருப்பவன்.

★548. *கஹந:* - அளவிலாப் பெருமை உடையவன்.

549. *குப்த:* - தன் பெருமைகளை அறிந்த பூர்வாசாரியர்களால் ரக்ஷிக்கப்படுபவன்.

550. *சக்ர கதாதர:* - பஞ்சாயுதபாணி (சக்ரம், வில், வாள், தண்டு, சங்கம்); "அங்கை ஆழி சங்கு தண்டு வில்லும் வாளும் ஏந்தினாய்" - ச.வி. 24.

## சுலோகம் - 59

★551. *வேதா:* - அன்பர்களுக்கு மங்கலமான விபவங்களை செய்பவன் (விபவம் - பெருமை, செல்வம், வாழ்வு, வீடுபேறு); "தாய் மனத்து இரங்கி அருளினைக் கொடுக்கும் தயரதன் மதலை" - பெ.தி. 4.3.5.

552. *ஸ்வாங்க:* - தன் சர்வேச்வர தன்மைக்குச் சிறப்பு அடையாளங்களான குடை, சக்ரம், சாமரம், பேரிவாத்தியம், முரசு, சங்கு, பாகவத சிரோமணிகள் முதலிய பரிகரங்களை (பரிவாரங்களை) உடையவன்; "உன் பாஞ்ச சன்னியம் போல்வன சங்கங்கள்... பறையே, பல்லாண்டு இசைப்பாரே" - பாவை. 26.

★553. *அஜித:* - (அவதார காலங்களில்) யாராலும் வெல்லப்படாதவன்.

554. *க்ருஷ்ண:* - கறுத்த நிறமுடையவன்; "கண்ணன் என்னும் கருந்தெய்வம்" - நா.தி. 13.1.

555. *த்ருட:* - உறுதியானவன்.

556. *ஸங்கர்ஷண:* - சராசரங்களை ஈர்ப்பவன்.

★557. *அச்யுத:* - தன் நிலையிலிருந்து நழுவாதவன்.

558. *வருண:* - மறைந்து இருப்பவன். (அஸ்தமனமாகும் சூரியன் தன் கிரணங்களை மறைப்பதனால் வருணன் ஆகிறான்)

★559. *வாருண:* - அன்பர்களிடம் என்றும் இருப்பவன்.

★560. *வ்ருக்ஷ:* - அடியார்களுக்கு நிழல் தரும் வடவிருக்ஷம் (ஆலமரம்) போன்றவன்; "உன் பாத நிழல் அல்லால் மற்றோர் உயிர்ப்பிடம் நான் எங்கும் காண்கின்றிலேன்" - பெ.ஆ.தி. 5.3.4.

★561. *புஷ்கராக்ஷ:* - தாமரைக் கண்ணன்; "பங்கயக் கண்ணானை" - பாவை. 14.

★562. *மஹாமநா:* - விரிந்த உள்ளம் படைத்தவன்; "எனக்கு ஆர் அருள் செய்யும் நெடியானை" - திருவாய். 9.4.10. (ஆர் - நிறைந்த)

## சுலோகம் - 60

563. *பகவாந்* - வழிபடத் தக்கவன்; "அந்தம் இல் ஆதி அம் பகவன்" - திருவாய். 1.3.5.

564. *பகஹா* - குணவான் (ஐச்வர்யம், வீரியம், கீர்த்தி, லக்ஷ்மீ, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறு குணங்கள் உடையவன்).

565. *நந்தீ* - நந்தன் குழந்தை; "நந்தன் மதலை" - பெ.தி. 8.4.9.

566. *வநமாலீ* - வைஜயந்தி என்னும் வனமாலையை அணிந்து இருப்பவன்.

567. *ஹலாயுத:* - (பலராம அவதாரத்தில்) கலப்பையை ஆயுதமாக உடையவன்.

568. *ஆதித்ய:* - முற்பிறப்பில் அதிதியாக இருந்த தேவகியின் புதல்வன்; "தேவகி சிங்கமே" - பெ.ஆ.தி. 1.3.4.

569. *ஜ்யோதிராதித்ய:* - சோதியான்; "நந்தா கொழுஞ்சுடரே" - பெ.தி. 1.10.9.

570. *ஸஹிஷ்ணு:* - பொறுமை உள்ளவன்.

★571. *கதிஸத்தம:* - தர்மவழி காட்டுபவன்; "ஆற்ற நல்ல வகை காட்டும் அம்மானை" - திருவாய். 4.5.5.

## சுலோகம் - 61

★572. *ஸுதந்வா* - சிறந்த வில்லை ஏந்தியவன்; "சார்ங்க விற் சேவகனே" - பெ.ஆ.தி. 5.4.4.

573. *கண்டபரசு:* - மழுவை (கோடாலி) ஆயுதமாகக் கொண்டவன்; "வென்றி நீள் மழுவா" - திருவாய். 6.2.10.

574. *தாருண:* - பகைவர்களை அழிப்பவன்.

575. *த்ரவிணப்ரத:* - சாஸ்திரங்கள் ஆகிய செல்வத்தைக் கொடுப்பவன்; "பகர மறை பயந்த பண்பன் - மு.தி.அ. 33. (பகர - ஓதுவிக்க; பயந்த - கொடுத்த)

576. *திவிஸ்ப்ருக்* - மேலான பொருளை அறிந்தவன்.

577. *ஸர்வத்ருக்* - எல்லாம் காண்பவன்.

578. *வ்யாஸ:* - வேதங்களை நான்காக வகுத்தவன்; "நால் வேதப் பண்ணகத்தாய்" - மு.தி.அ. 68. (பண்ணவன் - குரு, முனிவன், கடவுள்)

579. *வாசஸ்பதி:* - வாக்குக்கு அதிபதி ஆக இருந்து, ஐந்தாம் வேதமாகப் போற்றப்படும் மஹாபாரத காவியத்தை இயற்றியவன்.

580. *அயோநிஜ:* - யோனி பிறப்பு இல்லாதவன் (யோனி - கருப்பப்பை). (கர்ப்பத்தில் பிறவாத நரசிம்ம அவதாரம்)

## சுலோகம் - 62

581. *த்ரிஸாமா:* - ஸாம வேதத்தின் மூன்று வகையான பாடல்களினால் (ப்ருஹத், ரதந்த்ரம், வாமதேவ்யம்) பாடி வணங்கப்படுபவன்; "சந்தோகா! பௌழியா! தைத்ரியா! சாம வேதியனே!" - பெ.தி. 7.7.2. (சந்தோகன் - சாந்தோக்கிய உபநிஷத்தை அறிந்தவன்; பௌழியன் - பிருஹதாரண்யக உபநிஷத்தை அறிந்தவன்; தைத்திரியன் - தைத்திரிய உபநிஷத்தை அறிந்தவன்)

582. *ஸாமக:* - ஸாம வேத கீதம் பாடுபவன்; "சாம வேத கீதனாய சக்ரபாணி அல்லையே" - ச.வி. 14.

583. *ஸாம:* - தன்னை தோத்திரம் செய்வோரின் பாவத்தை ஒழிப்பவன்; "தொழுவார் வினை போக மேவும் பிரான்" - திருவாய். 4.5.4. (மேவுதல் - விரும்புதல்)

584. *நிர்வாணம்* - முக்தி வடிவினன்.

585. *பேஷஜம்* - ஔஷதமாக (மருந்து) இருப்பவன்; "அடியார் வினை கெடுக்கும் நச்சும் மா மருந்தம்" - திருவாய். 3.4.5. (நச்சுதல் - விரும்புதல்; மா மருந்து - மேன்மையான ஔஷதம்) (எம்பெருமான் உணவாக மட்டும் ஆகாமல் முதலில் உணவு உண்ண வல்லமை அளிக்கும் சிறந்த மருந்தும் ஆகிறான். வந்த கேடுகளைப் போக்குதல் மட்டும் இன்றி, கேடு வருவதற்கு முன்பாகவே அதன் காரணங்களான வினைகளையும் போக்கும் மருந்து ஆகவும் உள்ளான். அவனைப் பார்க்காமல் போனாலும் அவனது திருநாமத்தைக் காற்றுவாக்கில் கேட்டாலே வினைகள் எல்லாம் போகும்! "நமனும் முற்கலனும் பேச, நரகில் நின்றார்கள் கேட்க, நரகமே சுவர்க்கம் ஆகும் நாமங்கள் உடைய நம்பி" - மாலை. 12.

586. *பிஷக்* - மருத்துவன்; "செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே" - பெருமாள். 4.9. (செடியாய - கிளைத்துப் பரந்த)

587. *ஸந்யாஸக்ருத்* - நான் (அஹங்காரம்), எனது (மமகாரம்) ஆகிய பற்று அறுதலுக்கான ரஜோ, தமோ குணங்களைப் போக்குபவன். (ரஜோகுணம் - மத்திமமான அறிவு; தமோகுணம் - காம வெகுளி காரணமான குணம்)

588. *சம:* - உபதேசிப்பவன் (காமம், குரோதம், பயம் முதலியவற்றை அடக்குவதற்கு வழிகாட்டுபவன்); "உலகத்து அறநூல்

சிங்காமை விரித்தவன்" - பெ.தி. 10.6.1. (சிங்காமை - குன்றிப் போகாதபடி, சுருங்காதபடி; விரித்தவன் - பரப்பியவன்)

589. *சாந்த:* - சாந்தம் உள்ளவன்.

590. *நிஷ்டா:* - தியானத்துக்கு உரிய பொருளானவன்; "சிந்தை தன்னுள் நீங்காது இருந்த திருவே" - பெ.தி. 4.9.2.

591. *சாந்தி:* - ஸமாதியில் அடையப்பெறும் ஒருநிலை. (ஸமாதி - மனத்தைப் பரம்பொருளோடு ஒன்றுபடுத்துதல்)

★592. *பராயணம்* - மோக்ஷத்திற்கு வழியாகிய பரமபக்தியை அருள்பவன்; "மருவித் தொழும் மனமே தந்தாய்" - திருவாய். 2.7.7. (மருவி - விரும்பி)

**சுலோகம் - 63**

593. *சுபாங்க:* - யோக அங்கங்களை (யமம், நியமம், ஆஸனம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணம், த்யாநம், ஸமாதி) உடையவன்.

594. *சாந்தித:* - ஸாயுச்சியமாகிய சாந்தி நிலையைக் கொடுப்பவன் (ஸாயுச்சியம் - ஆன்மா கடவுளிடம் ஒன்றும் நிலை); "அடியார்களைக் கொண்டுபோய்... தன் தாளிணைக் கீழ்க்கொள்ளும் அப்பனை" - திருவாய். 3.7.7. (தாளிணை - திருவடி இரண்டு)

595. *ஸ்ரஷ்டா:* - படைப்பவன்.

596. *குமுத:* - அவரவர்க்குத் தகுந்த இன்பங்களை அளித்து மகிழ்விப்பவன்.

597. *குவலேசய:* - இப்புவியில் ஜீவர்களை அடக்கி ஆள்பவன்; "உலகம் மூன்று உடையாய்! என்னை ஆள்வானே" - திருவாய். 6.10.10.

598. *கோஹித:* - பூமிக்கு அனுகூலம் செய்பவன்.

599. *கோபதி:* - பூமிக்கு தலைவன்; "அங்கண் மா ஞாலத்து அரசர்" - பாவை 22. (அங்கண்-அழகிய இடம்; ஞாலம்-பூமி)

600. *கோப்தா* - ரக்ஷிப்பவன்; "உயிர்கள் காப்பானே" - திருவாய். 6.9.3.

★601. *வ்ருஷபாக்ஷ:* - தர்மத்துக்கு அச்சாக (ஆதாரமாக) இருப்பவன்.

602. *வ்ருஷப்ரிய:* - தர்மத்தில் அன்புள்ளவன்; "தரும அரும் - பயன் ஆய திருமகளார் தனிக் கேள்வன்" - திருவாய். 1.6.9.

## சுலோகம் - 64

603. *அநிவர்த்தீ* - சம்சாரச் சுழலில் இருப்போரைத் திருப்பாதவன்.

604. *நிவ்ருத்தாத்மா* - நிவர்த்தனின் சுவாமி. (நிவர்த்தன் - துறவி)

605. *ஸம்க்ஷேப்தா* - பிறவி எடுப்போர்களின் அறிவையும் மஹிமையையும் சுருங்கச் செய்பவன்.

606. *க்ஷேமக்ருத்* - நன்மை புரிபவன்.

607. *சிவ:* - அவர் அவர்க்கு உரிய மங்கலங்களைத் தருபவன்.

608. *ஸ்ரீவத்ஸவக்ஷா:* -ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவை (மச்சம்) திருமார்பில் உடையவன்; "திரு மறு மார்பன்" - திருவாய். 3.4.3.

609. *ஸ்ரீவாஸ:* - லக்ஷ்மியை அகலாமல் தன் திருமார்பில் கொண்டவன்; "அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பா" - திருவாய். 6.10.10. (இறையும் - இமைப்பொழுதும்)

610. *ஸ்ரீபதி:* - திருமகள் கணவன்; "திருமகளார் தனிக் கேள்வன்" - திருவாய். 1.6.9.

611. *ஸ்ரீமதாம் வர:* - செல்வர்களுள் சிறந்தவன்; "தனிப் பெரு நாயக" - ஆசிரியம் - 1.

## சுலோகம் - 65

612. *ஸ்ரீத:* - ஐசுவரியம் அளிப்பவன்.

613. *ஸ்ரீச:* - லக்ஷ்மி வல்லபன் (மணாளன்).

614. *ஸ்ரீநிவாஸ:* - பிராட்டிக்குச் சேர்விடமாய் இருப்பவன்; "மலர் மேல் உறைவாள் உறை மார்பினன்" - திருவாய். 4.5.2. (திருவேங்கடம் - திருமலை திருப்பதி திவ்யதேசப் பெருமாள் ஸ்ரீநிவாசன்)

615. *ஸ்ரீநிதி:* - பிராட்டிக்கு நிதியாக உள்ளவன்; "திருவுக்கும் திரு ஆகிய செல்வா" - பெ.தி. 7.7.1. (திரு - திருமகள், செல்வம்)

★616. *ஸ்ரீவிபாவந:* - பிராட்டியினாலே புகழ் பெற்றவன்; "பெண் ஆக்கை யாப்புண்டு... திருவரங்கச் செல்வனார்" - நா.தி. 11.7.

617. *ஸ்ரீதர:* - லக்ஷ்மியை தரிப்பவன்.

618. *ஸ்ரீகர:* - தன் அவதாரங்களுக்கு ஏற்ப பிராட்டியைத் தன்னைப் பின்பற்றச் செய்பவன்; "எழில் மலர் மாதரும் தானும் இவ் ஏழ்

உலகை இன்பம் பயக்க இனிது உடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான்" - திருவாய். 7.10.1. (பயக்க - அடைய)

619. *ச்ரேய: ஸ்ரீமாந்* - சுபங்களுக்கு எல்லாம் புகலிடமான லக்ஷ்மியை பிரியாது சேர்ந்து இருப்பவன்; "திருவிளையாடு திண் தோள் திருமாலிருஞ்சோலை நம்பி" - நா.தி. 9.3.

620. *லோகத்ரயாச்ரய:* - மூன்று உலகங்களுக்கும் ஆதாரமாக இருப்பவன்; "மூவுலகு ஆளியே" - திருவாய். 7.2.10.

## சுலோகம் - 66

★621. *ஸ்வக்ஷ:* - அழகிய கண்களை உடையவன்; "கண் அழகர்" - நா.தி. 11.2.

★622. *ஸ்வங்க:* - அழகிய அங்கங்களை உடையவன்.

623. *சதாநந்த:* - பேரானந்தம் உடையவன்.

624. *நந்தி:* - எப்போதும் மகிழ்ச்சியாக இருப்பவன்.

625. *ஜ்யோதிர் கணேச்வர:* - நித்யசூரிகளின் ஈசுவரன்; "அயர்வு அறும் அமரர்கள் அதிபதி" - திருவாய். 1.1.1. (அயர்வு - மறதி)

★626. *விஜிதாத்மா:* - அடியார்களுக்கு எளியன்; "பத்து உடை அடியவர்க்கு எளியன்" - திருவாய். 1.3.1. (பத்து - பக்தி) (சபரி தந்த கனியை விரும்பி உண்டவன், அனுமத் பிரியன், தூது போனவன், தேரோட்டியவன்).

★627. *விதேயாத்மா* - கீழ்ப்படிதல் உள்ளவன்; "நாரணா! நீராட வாராய்" - பெ.ஆ.தி. 2.4.1. "வா, போகு, வா, இன்னம் வந்து ஒரு காற் கண்டு போ" - பெருமாள். 9.4.

★628. *ஸத்கீர்த்தி:* - உண்மையான சீர்த்திமான் (சீர்த்தி - புகழ்); "புகழும் நல் ஒருவன்" - திருவாய். 3.7.1.

★629. *சிந்ந ஸம்சய:* - சந்தேகத்துக்கு இடமின்றி அடியார்கள் அனுகும்படி உள்ளவன்; "தமர் ஆவார் - யாவர்க்கும்" - 4. தி.அ. 91. (தமர் - சுற்றத்தார்)

## சுலோகம் - 67

★630. *உதீர்ண:* - நன்றாகக் காட்சி தருபவன்; "காட்டித் தன் கனை கழல்கள்" - திருவாய். 10.6.11. (கனை - ஒலித்தல்; கழல் - காலில் அணியும் அணிகலன், பாதம்)

631. *ஸர்வதச் சக்ஷு:* - யாவராலும் காணப்படுபவன் (விபவம் - வாமனன், பரசுராமன், ராமன், பலராமன், கண்ணன் ஆகிய அவதாரங்கள்; அர்ச்சை: - வழிபாட்டிற்கு உரிய தெய்வத் திருமேனி); "எங்கும் தானாய நங்கள் நாதனே" - திருவாய். 1.8.9.

632. *அநீச:* - எஜமானனாய் இல்லாதவன்; "ஆய்ச்சி ஆகிய அன்னையால் அன்று வெண்ணெய் வார்த்தையுள் சீற்றமுண்டு அழு, கூத்த அப்பன்" - திருவாய். 6.2.11.

633. *சாச்வதஸ்திர:* - நிலையாய் இருப்பவன் (அர்ச்சா மூர்த்தி); "தமர் உகந்தது எவ் உருவம், அவ் உருவம் தானே" - மு.தி.அ. 44. (தமர் - தன் அடியார்)

634. *பூசய:* - பூமியில் சயனித்தவன்; "கடல்மல்லைத் தலசயனத்தே" - பெ.தி. 2.5.7.

★635. *பூஷண:* - எளிமைக் குணத்தையே ஓர் ஆபரணமாக உடையவன்; "வாத மா மகன், மர்க்கடம், விலங்கு மற்று ஓர் சாதி என்று ஒழிந்திலை, உகந்து... கோது இல் வாய்மையினாயொடும் உடனே உண்பன் நான்" - பெ.தி. 5.8.2. (இராமன், அனுமனை மர்க்கடம் (குரங்கு) என்று கருதாது அவனுடன் ஒரே இலையில் எதிர் எதிராக உண்ணல்; விதுரன் இட்ட உணவைக் கண்ணன் ஏற்றுக்கொள்ளல்).

636. *பூதி:* - பக்தர்களுக்கு சகல செல்வமுமாய் இருப்பவன்; "சேல் ஏய் கண்ணியரும், பெரும் செல்வமும், நன் மக்களும், மேலாத் தாய் தந்தையும் அவரே இனி ஆவாரே" - திருவாய். 5.1.8.

637. *அசோக:* (விசோக: என்பதும் பாடம்) - சோகம் (துன்பம்) அற்றவன்; "துக்கம் இல் ஞானச் சுடர் - ஒளிமூர்த்தி" - திருவாய். 3.10.9.

638. *சோகநாசந:* - ஆபத்உத்தாரணன் (துன்பத்தினின்றும் காப்போன்).

**சுலோகம் - 68**

639. *அர்ச்சிஷ்மாந்* - பேரொளி படைத்தவன்; "மாணிக்கச் சோதியை" - திருவாய். 1.7.3.

640. *அர்ச்சித:* - அர்ச்சா மூர்த்தியாய் ஆராதிக்கப்படுபவன்; "நெஞ்சினால் நினைப்பான் எவன், அவன் ஆகும் நீள்கடல் வண்ணனே" - திருவாய். 3.6.9. (திருவரங்க திவ்யதேசப் பெருமாள் ஸ்ரீரங்கநாதன், அர்ச்சவதார முதல்வன்)

641. *கும்ப:* - வடிவழகு முதலியவற்றால் பக்தர்களால் விரும்பப்படுகிறவன்; "என் அமுதினைக் கண்ட கண்கள் மற்று ஒன்றினைக் காணாவே" - அ.ஆ.பி. 10.

642. *விசுத்தாத்மா* - பரிசுத்த ஆன்மா; "அமலன் ஆதிப்பிரான்" - அ.ஆ.பி. 1. (அமலன் - குற்றம் குறை இல்லாதவன்)

643. *விசோதந:* - பரிசுத்தம் ஆக்குபவன்; "தொழுவார் வினைச் சுடரை நந்துவிக்கும் வேங்கடமே" - மு.தி.அ. 26.

644. *அநிருத்த:* - பகவானின் நான்கு நிலைகளுள் ஒன்று அநிருத்தன். (வஸுபாண்டம் என்ற க்ஷேத்திரத்தில் வியூக வாஸுதேவனான அநிருத்தன் ஜனார்த்தனன் என்ற திருநாமத்துடன் நித்யவாசம் பண்ணுதல்; திருவல்லிக்கேணி திவ்ய தேசத்தில் வேங்கடகிருஷ்ணன் தன் குமாரன் அநிருத்தனுடன் எழுந்தருளி உள்ளான்)

645. *அப்ரதிரத:* - ஒப்பில்லாதவன், பகை அற்றவன்; "ஒத்தார் மிக்காரை இலையாய மா மாய" - திருவாய். 2.3.2. (இலை - இல்லை)

646. *ப்ரத்யும்ந:* - எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்பவன்; "உலகு அனைத்தும் விளக்கும் சோதி" - பெருமாள். 10.1.

647. *அமிதவிக்ரம:* - மூன்று உலகங்களிலும் தன் திருவடியைப் பதித்தலில் அடங்காமல் இருந்தவன்.

**சுலோகம் - 69**

648. *கால நேமி நிஹா* - அவித்யை (அறியாமை, மாயை, ஆணவம்) எனப்படும் கால சக்கரத்தை அழிப்பவன்.

649. *சௌரி:* - வாஸுதேவர் (சூரன்) புத்திரன். (திருக்கண்ணபுரம் திவ்யதேச உற்சவமூர்த்தி சௌரிராஜன். இந்த க்ஷேத்திரம் பஞ்ச கிருஷ்ண க்ஷேத்திரங்களுள் ஒன்று; திருமங்கை ஆழ்வார் திருமந்திர உபதேசம் பெற்ற இடம்)

★650. *சூர:* - பராக்கிரமசாலி; "எவ்வரி வெஞ் சிலைத் தடக்கை இராமன் தன்னை இறைஞ்சுவார் இணையடியே இறைஞ்சினேனே" - பெருமாள். 10.3. (தடக்கை - பெரிய கை) (சித்ரகூட பர்வதத்தில் சூரரான ராமாவதாரமாய் இருப்பவன்)

★651. *சூரஜநேச்வர:* - சுக்ரீவன், ஹனுமான், அங்கதன் முதலிய வானர வீரர்களுக்குத் தலைவன்.

652. *த்ரிலோகாத்மா* - பக்தர்களுக்கு அநுக்கிரஹம் செய்வதற்காக மூவுலகங்களிலும் சஞ்சாரம் செய்பவன்.

653. *த்ரிலோகேச:* - மூன்று உலகங்களுக்கும் அதிபதி; "மூவுலகு ஆளி" - திருவாய். 8.9.5.

654. *கேசவ:* - துயர் களைபவன்; "வினையேன் வினைதீர் மருந்து ஆனாய்... கேசவா" - திருவாய். 1.5.6. (அஷ்டபுயகரம், திருவட்டாறு திவ்யதேசங்களின் பெருமாள் ஆதிகேசவன்)

655. *கேசிஹா* - கேசி என்கிற பெயருடன் குதிரை வடிவமாக வந்த அரக்கனின் வாயைப் பிளந்தவன்; "மா வாய்ப் பிளந்தானை" - பாவை. 8. (மா - குதிரை)

656. *ஹரி:* - பச்சைவண்ணன்; "பச்சை மா மலை போல் மேனி" - மாலை. 2. (ஆர்த்திகளைப் (வேதனை) போக்குபவன், யாகங்களில் அவிசுகளை ஏற்றுக்கொள்பவன், கோவர்த்தனமலையில் ஹரி என்ற பெயருடன் எழுந்தருளியுள்ளவன்)

## சுலோகம் - 70

657. *காமதேவ:* - விரும்புவன யாவும் அளிப்பவன்; "அலம்புரி தடக்கை ஆயனே" - பெ.தி. 1.6.2. (அலம்புரி - போதும் போதும் என்று சொல்லும்படி கொடுத்தல்)

658. *காமபால:* - கொடுத்ததைக் காப்பவன்.

659. *காமீ* - விரும்பப்படுகின்ற எல்லாப் பொருள்களும் நிறைந்தவன்; "குறை ஒன்றும் இல்லாத கோவிந்தா!" - பாவை. 28.

660. *காந்த:* - யாவரையும் ஈர்ப்பவன்.

661. *க்ருதாகம:* (க்ருத+ஆகம:) - ஆகமங்களை (வேத சாஸ்த்ரங்கள்) உண்டாக்கியவன்; "சமயநீதி நூல் என்கோ" - திருவாய். 3.4.6.

662. *அநிர்தேச்ய வபு:* - வரையறுக்க முடியாத திருமேனிகளை உடையவன்; "கருநீலவண்ணன் தன்னை, ஒரு வடிவத்து ஓர் உருவு என்று உணரல் ஆகாது" - நெ.தா. 3.

663. *விஷ்ணு:* - எல்லாவற்றிலும் வியாபித்து இருப்பவன்.

★664. *வீர:* - சாதுக்களின் ஆகுலம் (துன்பம்) அகல்வித்தவன்; "மறை முனிவன் வேள்வி காத்து" - பெருமாள். 10.2.

665. *அநந்த:* - முடிவு இல்லாதவன்; "அந்தம் இல் ஆதி அம் பகவன்" - திருவாய். 1.3.5.

666. *தநஞ்சய:* - உலக ஐஸ்வர்யங்களுக்கு அப்பாற்பட்டவன்.

### சுலோகம் - 71

667. *ப்ரஹ்மண்ய:* - சேதன, அசேதனங்களுக்கு அநுகூலன். (சேதனன் - அறிவுடையோன், உயிர்)

668. *ப்ரஹ்மக்ருத் ப்ரஹ்மா* - பரந்த உலகங்களைப் படைப்பவனாகிய பிரமனை நியமிப்பவன்; "தேவும் எப்பொருளும் படைக்கப் பூவில் நான்முகனைப் படைத்த தேவன்" - திருவாய். 2.2.1.

669. *ப்ரஹ்ம* - முழுமுதற் கடவுள்; "பெரிய பரஞ்சோதி புக்க அரியே" - திருவாய். 7.6.10. (புக்க அரியே - புகுந்த திருமாலே)

670. *ப்ரஹ்ம விவர்த்தந:* - தவம் முதலிய தர்மங்களை வளர்ப்பவன்.

671. *ப்ரஹ்மவித்:* - வேத வித்தகன்; "பண்டு ஆய வேதங்கள் நான்கும்... கண்டானை" - பெ.தி. 2.5.9.

672. *ப்ராஹ்மண:* - வேதத்தைக் கற்பிப்பவன் (தத்தாத்ரேயன் என்னும் அந்தணராகப் பிறந்து வேதமார்க்கத்தை நிலைநிறுத்தியவன்); "கலைகளும், வேதமும், நீதிநூலும்... நீர்மையினால் அருள்செய்து - பெ.தி. 2.8.5.

673. *ப்ரஹ்மீ* - வேதங்களாகிய பிரமாணங்களையும் அவற்றின் பொருள்களாகிய பிரமேயங்களையும் உடையவன்; "வேங்கட வேதியனை" - பெ.தி. 1.9.10.

674. *ப்ரஹ்மஜ்ஞ:* - வேதங்களை முழுமையாக அறிந்தவன்; "இவர், வாயில் நல்வேதம் ஓதும் வேதியர்" - பெ.தி. 9.2.1.

675. *ப்ராஹ்மண ப்ரிய:* - வேதம் வல்ல அந்தணர்களுக்கு அன்பன்; "அந்தணர்-தம் சிந்தையானை" - நெ.தா. 14.

### சுலோகம் - 72

★676. *மஹா க்ரம:* - ஜீவர்களை படிப்படியாக உயரச் செய்பவன்; "நெறிவாசல் தானேயாய் நின்றானை" - மு.தி.அ. 4.

★677. *மஹா கர்மா* - சிறந்த செயலை உடையவன்.

678. *மஹா தேஜா:* - பேரொளி படைத்த ஒளிவண்ணன்; "வீழ்வு இலாத போகம் மிக்க சோதி" - ச.வி. 18.

679. *மஹோரக:* - மிகப் பெரியோனாக இருந்தும் அற்பர்கள் உள்ளத்திலும் புகுபவன்; "எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே" - திருவாய். 6.10.3.

★680. *மஹா க்ரது:* - ஆராதனத்துக்கு எளியவன்; "பிரிவகை இன்றி நல் நீர் தூய், புரிவதுவும் புகை பூவே" - திருவாய். 1.6.1.

★681. *மஹா யஜ்வா* - தன்னை ஆராதிப்பவர்களைப் பக்குவம் ஆக்குபவன்.

★682. *மஹா யஜ்ஞ:* - சிறந்த ஜப யஜ்ஞத்தை உடையவன்.

★683. *மஹா ஹவி:* - ஆத்மா என்னும் சிறந்த அவிசை ஏற்பவன்; "எனது ஆவி தந்தொழிந்தேன்" - திருவாய். 2.3.4.

## சுலோகம் - 73

★684. *ஸ்தவ்ய:* - தொழத்தக்கவன்; "நாத் தழும்பு எழ நாரணா என்று அழைத்து மெய் தழும்பத் தொழுது ஏத்தி" - பெருமாள். 2.4.

★685. *ஸ்தவ ப்ரிய:* - துதியை அன்புடன் ஏற்பவன்; "எங்கனே சொல்லினும் இன்பம் பயக்கும்" - திருவாய். 7.9.11.

★686. *ஸ்தோத்ரம்* - தோத்திரமாய் உள்ளவன்; "என்னால் தன்னைப் பார் பரவு இன் கவி பாடும் - பரமரே" - திருவாய். 7.9.5.

★687. *ஸ்துத:* - பூஜிக்கப்படுவோன்; "மெய்ந் நா மனத்தால் வழிபாடு செய்யும் திருவேங்கடத்தானே" - திருவாய். 6.10.6.

★688. *ஸ்தோதா* - தன்னை வழிபடுகின்றவர்களை மேம்படுத்துபவன்; "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே ஒக்க அருள் செய்வர்" - பெ.தி. 11.3.5.

★689. *ரண ப்ரிய:* - போரில் விருப்பம் உடையவன்; "செற்றார் திறல் அழியச் சென்று செருச் செய்யும்" - பாவை. 11.

★690. *பூர்ண:* - நிறைந்தவன்; "எல்லா உலகும் உடையான்" - திருவாய். 4.5.7.

★691. *பூரயிதா* - பூர்த்தி செய்பவன்.

★692. *புண்ய:* - புனிதம் ஆக்குபவன்; "உன்தன்னைப் பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாம் உடையோம்" (நீ வந்து பிறக்கும்படி பாக்கியம் செய்த ஆயர்குலத்தில் பிறந்தோம்) - பாவை. 28.

★693. *புண்ய கீர்த்தி:* - தூய்மை செய்யவல்ல புகழ் உடையவன்; "பேசும் இன் திருநாமம் எட்டு எழுத்தும் சொலி நின்று, பின்னரும் பேசுவார் - தம்மை உய்ய வாங்கி, பிறப்பு அறுக்கும் பிரான்" - பெ.தி. 1.8.9.

694. *அநாமய:* - பவநாசன் (பவம்-பிறப்பு); "பிறவித் துழதி நீங்க, என்னைத் தீ மனம் கெடுத்தாய்" - திருவாய். 2.7.8. (துழதி - துன்பம்)

## சுலோகம் - 74

695. *மநோஜவ:* - மனோ வேகத்தில் செயல் ஆற்றுபவன்; "கடிவார் தீய வினைகள் நொடியாரும் அளவைக் கண்... மாதவனாரே" - திருவாய். 1.6.10. (கடிவார் - நீக்குவார்)

696. *தீர்த்த கர:* - தூய்மைக்கு மூலமானவன்; "தீர்த்தகரர்" - 2. தி.அ. 14.

697. *வஸு ரேதா:* - தேஜஸின் இருப்பிடம் ஆனவன்; "ஆதி அம் சோதி உருவை அங்கு வைத்து இங்குப் பிறந்த வேத முதல்வனைப் பாடி" - திருவாய். 3.5.5. (தேஜஸே தேவகி வயிற்றில் புகுந்து கர்ப்பம் ஆயிற்று)

698. *வஸு ப்ரத:* - தன்னையே செல்வமாகத் தருபவன் (தேவகிக்கு); "தாயைக் குடல்-விளக்கம் செய்த தாமோதரனை" - பாவை. 5.

★699. *வஸு ப்ரத:* - கௌரவம் அளிப்பவன் (உலகத்திற்கே தந்தை ஆகிய தான் தயரதனுக்கு மகனாகும்படியான பெருமையைத் தந்தவன்); "தயரதற்கு மகன் தன்னை அன்றி மற்று இலேன்" - திருவாய். 3.6.8.

700. *வாஸுதேவ:* - வஸுதேவனின் புத்ரன் வாஸுதேவன் (கண்ணன்).

701. *வஸு:* - வசிப்பவன்; "பாற்கடலில் துயின்ற பரமன்" - பாவை. 2.

702. *வஸு மநா:* - வஸுதேவரிடம் மனம் வைத்தவன்.

703. *ஹவி:* - கொடுக்கப்பட்டவன்; "ஒருத்தி மகனாய்ப் பிறந்து, ஒருத்தி மகனாய் ஒளித்து வளர" - பாவை. 25.

## சுலோகம் - 75

704. *ஸத் கதி:* - ஸாதுக்களுக்குப் புகலிடமாய் இருப்பவன்; "பற்றிலார் பற்ற நின்றானே" - திருவாய். 7.2.7.

705. *ஸத் க்ருதி:* - விநோதமான செயல்கள் உடையவன்; "குன்றம் ஒன்று ஏந்தியதும், உரவு நீர்ப் பொய்கை நாகம் காய்ந்ததும்... பள்ளிப்பிரான் தன் மாய வினைகள்" - திருவாய். 6.4.1.

706. *ஸத்தா* - உலக இருப்புக்குக் காரணம் ஆக இருப்பவன்; "உன்னை அன்றி இலேன் கண்டாய், நாரணனே" - 4. தி.அ. 7.

707. *ஸத் பூதி:* - ஸாதுக்களுக்கு அனைத்துச் செல்வங்களாக இருப்பவன்.

708. *ஸத் பராயண:* - நல்லோரின் சரணாலயமாய் உள்ளவன்; "அடிக்கீழ் அமர்ந்து புகுந்து, அடியீர் வாழ்மின் என்று என்று அருள் கொடுக்கும்" - திருவாய். 6.10.11.

709. *சூர ஸேந:* - சூரர்களை (யாதவர், பாண்டவர் கிருஷ்ணனுக்கும் லக்ஷ்மணன், அனுமன், சுக்ரீவன், ராமனுக்கும்) சேனையாக உடையவன்.

710. *யதுச்ரேஷ்ட:* - ஆயர்குலத் தோன்றல்; "ஆயர்குலத்தினில் தோன்றும் அணி - விளக்கை" - பாவை. 15. (அணிவிளக்கு - மங்கள தீபம்)

711. *ஸந்நிவாஸ:* - ஞானிகளுக்கு இருப்பிடமானவன்.

712. *ஸுயாமுந:* - யமுனை நதிக்கரையில் லீலைகள் பல புரிந்தவன்; "தூய பெரு நீர் யமுனைத் துறைவனை" - பாவை. 5.

## சுலோகம் - 76

713. *பூதாவாஸ:* - உயிரினங்கள் தங்கும் இடமாக இருப்பவன்; "தன்னுள் அனைத்து உலகும் நிற்க" - திருவாய். 9.6.4.

714. *வாஸுதேவ:* - பன்னிரண்டு அக்ஷர (எழுத்து) மந்திரத்திற்கு உரியவனாகிய வாஸுதேவன். (ஓம் பகவதே வாஸுதேவாய நம)

715. *ஸர்வாஸு நிலய:* - சராசரங்களுக்கு எல்லாம் இருப்பிடமானவன்.

716. *அநல:* - திருப்தி அடையாதவன் (அடியார்களுக்கு மேன்மேலும் நன்மைகள் செய்வதில்).

717. *தர்ப்பஹா* - கர்வத்தை அடக்குபவன். (கோகுலத்தில் கண்ணன் குன்றம் ஏந்திக் குடை பிடித்து ஆயர்களைக் கல்மாரி (மழை) காத்து இந்திரன் செருக்கை (அகங்காரம்) அடக்கினான்)

718. *தர்ப்பத:* - கர்வம் தருபவன் (அடியார்கள் தன்னைப் பரிபூர்ண அனுபவம் செய்யும்படியாக இருந்து 'எனக்குயாரும் நிகரில்லையே, எனக்கு இனி யார் நிகர் நீணிலத்தே' என்னும் பெருமித உணர்வைத் தருபவன்).

719. *அத்ருப்த:* - அகங்காரம் அற்றவன்.

720. *துர்த்தர:* - அடக்க முடியாதவன்.

★721. *அபராஜித:* - வெல்ல முடியாதவன்; "வீற்றிருந்து ஏழ் உலகும் தனிக்கோல் செல்ல" - திருவாய். 4.5.1.

## சுலோகம் - 77

722. *விச்வமூர்த்தி:* - உலகத்தை உடலாக உடையவன்; "உலகம் ஆய்" - திருவாய். 6.9.7.

723. *மஹா மூர்த்தி:* - பேருருவம் கொண்டவன்; "பெரிய மா மேனி" - பெ.தி. 9.1.8.

724. *தீப்த மூர்த்தி:* - ஜொலிக்கும் திருமேனியன்.

725. *அமூர்த்திமாந்* - மிக நுட்பமானவன்; "அருவு ஆகி நிற்கும்... ஈசனை" - திருவாய். 3.10.10. (அருவு - உருவமின்மை)

726. *அநேக மூர்த்தி:* - பல திருமேனிகள் உடையவன்; "பல பலவே சோதி வடிவு" - திருவாய். 2.5.6.

727. *அவ்யக்த:* - பார்வைக்கு எட்டாதவன்; "கண்கள் காண்டற்கு அரியன் ஆய்" - திருவாய். 3.6.11.

728. *சத மூர்த்தி:* - நூற்றுக்கணக்கான உருவங்கள் கொண்டவன்; "எண் இல் மூர்த்தியாய்" - ச.வி. 17.

729. *சதாநந:* - எண்ணற்ற திருமுகங்கள் உடையவன்.

## சுலோகம் - 78

730. *ஏக:* - ஒப்பற்ற ஒருவன்; "ஏகமூர்த்தி" - திருவாய். 4.3.2.

731. *நைக:* - பலவாய் இருப்பவன்; "யாவையும் யாவரும் ஆய் நின்ற மாயன்" - திருவாய். 6.8.7.

732. *ஸ:* - அவன் (ஞானத்தை உண்டு பண்ணுபவன்); "அவனே மற்று எல்லாமும்" - திருவாய். 9.3.2.

733. *வ:* - வசிப்பவன்; "எங்கும் உளன் கண்ணன்" - திருவாய். 2.8.9.

734. *க:* - பிரகாசிப்பவன்; "ஒளி மணி வண்ணனே" - பெ.தி. 10.5.1.

735. *கிம்* - எது? (எது பரம்பொருள் என்று பெரியோர்களிடம் கேட்டறியத் தக்கவன்); "உயர்நலம் உடையவன் எவன்" - திருவாய். 1.1.1.

736. *யத்* - (காத்தலில்) பிரயத்னம் செய்பவன்; "பகல் இரா என்பதுவும் பாவியாது, எம்மை இகல் செய்து, இரு பொழுதும் ஆள்வர்" - பெ.தி.அ. 81.

737. *தத்* - தூண்டி வளர்ப்பவன்; "செய்வார்களைச் செய்வேனும் யானே என்னும்" - திருவாய். 5.6.4.

738. *பதம் அநுத்தமம்* - மோக்ஷமும், மோக்ஷத்துக்கு வழியும் ஆனவன்; "உன் திருப்பாத மலர்க்கீழ்ப் பேராதே யான் வந்து அடையும்படி" - திருவாய். 2.9.7. (பேராதே - பிரிவே இல்லாதபடி)

739. **லோகபந்து:** - உலகத்தவர்க்கு உறவினன்; "தாயாய் தந்தையாய்" - திருவாய். 7.8.1.

740. **லோகநாத:** - உலகநாதன்; "அனைத்து உலகுக்கும் பிரானை" - திருவாய். 3.5.4. (திருக்கண்ணங்குடி திவ்யதேசப் பெருமாள் லோகநாதன்)

741. *மாதவ:* - மது என்னும் யாதவ குலத் தோன்றல்; "வங்கக்கடல் கடைந்த மாதவனை" - பாவை. 30.

742. *பக்தவத்ஸல:* - பக்தர்களிடத்தில் அன்பு உள்ளவன். (திருநின்றவூர் திவ்யதேசப் பெருமாள் பக்தவத்ஸலன்)

**ஃலோகம் - 79**

743. *ஸுவர்ணவர்ண:* - பொன் வண்ணன்; "பொன் இவர் மேனி" - பெ.தி. 9.2.1.

744. *ஹேமாங்க:* - பொன் மேனியன்; "பொன் மேனி கண்டேன்" - 3. தி.அ. 1.

745. *வராங்க:* - பேரழகன்; "கண்டவர் தம் மனம் வழங்கும் கணபுரத்து என் கருமணியே" - பெருமாள். 8.2.

746. *சந்தநாங்கதீ:* - தோள்வளை முதலிய ஆபரணங்கள் பூண்டவன்; "பலபலவே ஆபரணம்" - திருவாய். 2.5.6.

★747. *வீரஹா* - மகாவீரன்; "வெம்திறல் வீரரில் வீரர் ஒப்பார்" - பெ.தி. 2.8.2. (வெம்திறல் - மிக்க வலிமை)

748. *விஷம:* - (துஷ்ட நிக்ரஹம், சிஷ்ட பரிபாலனம் ஆகிய) வேறுபட்ட செயல்கள் செய்தவன்; "அரும் தீமை உன் அடியார்க்குத் தீர்த்து, அசுரர்க்குத் தீமைகள் செய்குந்தா!" - திருவாய். 2.6.1

749. *சூந்ய:* - குற்றம் அற்றவன்; "கோது இல் புகழ்க் கண்ணன்" - திருவாய். 8.2.11. (கோது - குற்றம்)

750. *க்ருதாசீ:* - உலகை மகிழ்விப்பவன்.

751. *அசல:* - வைராக்யம் உள்ளவன்.

752. *சல:* - மாறுபவன்; "மாறு சேர் படை நூற்றுவர் மங்க ஓர் ஐவர்க்குஆய், அன்று மாயப்போர் பண்ணி, நீறுசெய்த எந்தாய்" – திருவாய். 5.7.4. (நீறு - சாம்பல்)

## சுலோகம் - 80

753. *அமாநீ* - கௌரவம் பார்க்காதவன்; "தூதன் ஆய் மன்னவனால் சொல்லுண்டான்" - பெ.தி.11.5.7.

754. *மாநத:* - கௌரவம் அளிப்பவன்; "தேர் மன்னற்கு ஆய் அன்று தேர் ஊர்ந்தான்" - பெ.தி. 11.5.8. (ஊர்ந்தான் - செலுத்தினான்)

★755. *மாந்ய:* - மேன்மை அளிப்பவன்.

★756. *லோக ஸ்வாமீ* - உலகாதிபதி; "மேவிய உலகம் மூன்று - அவை ஆட்சி" - திருவாய். 8.1.4.

757. *த்ரிலோக த்ருத்* - மூவுலகையும் தாங்குவோன்; "மூவுலகும் காவலோன்" - திருவாய். 2.8.5.

★758. *ஸுமேதா:* - நல்லெண்ணம் கொண்டவன்.

★759. *மேதஜ:* - யாகத்தின் பயனாகத் தோன்றியவன் (அதிதி - பயோ விரதம் - வாமனன்; தேவகி - அநந்தவிரதம் - கண்ணன்; தயரதன் - புத்ர காமேஷ்டி - ராமன்).

760. *தந்ய:* - பாக்யவான்.

★761. *ஸத்யமேதா:* - உத்தமன்; "உத்தமன்" - மு.தி.அ. 99.

762. *தரா தர:* - மலையைக் குடையாகப் பிடித்தவன்; "குன்றம் எடுத்த பிரான்" - திருவாய். 7.4.11.

## சுலோகம் - 81

763. *தேஜோ வ்ருஷ:* - அன்பர்களை ரக்ஷிப்பதில் தன் சக்தியைப் பொழிபவன்.

764. *த்யுதிதர:* - விசேஷ சக்தி உடையவன்; "மாயக் கோலப்பிரான்" - திருவாய். 6.4.2.

★765. *ஸர்வ சஸ்த்ரப்ருதாம் வர:* - ஆயுதபாணிகளுள் சாலச் சிறந்தவன்.

766. *ப்ரக்ரஹ:* - அடியார்களை வழி நடத்துபவன்.

767. *நிக்ரஹ:* - எதிரிகளை அடக்குபவன்.

768. *வ்யக்ர:* - அடியாரின் விரோதிகளை அடக்குவதில் ஆர்வம் உள்ளவன்.

769. *நைகச்ருங்க:* - பகைவர்களை ஒழிப்பதில் பல உபாயங்களைக் கையாளுபவன்; "மாயங்கள் செய்து, சேனையைப் பாழ்பட நூற்றிட்டுப் போய்" - திருவாய். 6.4.10. (நூற்றிட்டு - அழித்து)

770. *கதாக்ரஜ:* - வஸுதேவன் - ஸுநாமை தம்பதிக்குப் பிறந்த கதன் என்ற யாதவனுக்கு முன் பிறந்தவன்.

### ஶ்லோகம் - 82

771. *சதுர்மூர்த்தி:* – (யது குலத்தில் அவதரித்தபோது பலராமன், வாஸுதேவன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்னும்) நான்கு மூர்த்திகளாக இருப்பவன்.

772. *சதுர் பாஹு:* - நான்கு திருத்தோள்கள் உடையவன்; "நான்குதோள்" - திருவாய். 8.10.10.

773. *சதுர்வ்யூஹ:* - (ஞானம், பலம், ஐச்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ் என்னும் ஆறுகுணங்களும் சமமாக நிரம்பிய) வாஸுதேவ ரூபம், (இரண்டு இரண்டு குணங்கள் முறையே பிரதானமாக விளங்கும்) ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்த ரூபங்களாக இருப்பவன்.

774. *சதுர்கதி:* - (அடியார்களின் பக்குவ நிலைக்கு ஏற்ப) இந்திர பதம், பிரம்ம பதம், கைவல்யம், மோக்ஷம் என்னும் நால்வகை கதிகளைத் தருபவன்.

775. *சதுராத்மா* - ஜாக்ரத், ஸ்வப்ந, ஸுஷுப்தி, துரியம் என்னும் நான்கு நிலைகளில் உள்ள ஆத்மாக்களாக விளங்குபவன்.

776. *சதுர் பாவ:* - ஆக்கல், அளித்தல், அழித்தல், முக்தி அருளுதல் ஆகிய நான்கு செயல்களை உடையவன்.

777. *சதுர்வேதவித்* - நான்கு வேதங்களுக்கும் விதையாய் இருப்பவன்.

778. *ஏகபாத்* - தன்னுடைய பாகம் ஒன்றினால் அவதரித்தவன்.

### ஶ்லோகம் - 83

779. *ஸமாவர்த்த:* - மீண்டும் மீண்டும் அவதரிப்பவன்; "பல்பிறவிப் பெருமானை" - திருவாய். 2.9.5.

780. *நிவ்ருத்தாத்மா* - கருணையினால் உலகத்தோடு சேர்ந்து இருந்தாலும், ஒன்றிலும் ஒட்டாத தனித்த மனம் உடையவன்.

781. *துர்ஜய:* - வெல்ல முடியாதவன்; "விண் முழுதும் உயக் கொண்ட வீரன்" - பெருமாள். 10.1.

782. *துரதி க்ரம:* - தவிர்க்க முடியாதவன்; "ஆத்தன் தாமரை அடி அன்றி மற்று இலம் - அரணே" - திருவாய். 10.1.6. (ஆத்தன் - ஆப்தன், இறைவன்; மற்று இலம் - வேறு ஒன்றும் இல்லாத)

783. *துர்லப:* - ஐம்புலன்களை வெல்லாதவர்களுக்கு அடைய முடியாதவன்; "நேசம் இலாதவர்க்கும் நினையாதவர்க்கும் அரியான்" - பெ.தி. 9.9.6. (நேசம் - பக்தி)

784. *துர்கம:* - உலகப்பற்று உள்ளவர்கள் அடைவதற்கு அரியவன்.

785. *துர்க:* - (அறியாமை, மாயை முதலான மறைவுகள் கோட்டையைப் போல் மூடிக்கொண்டு இருப்பதால் ஆன்மாவால்) நுழைய முடியாதவன்.

786. *துராவாஸ:* - யாவர்க்கும் எட்டாத இருப்பிடம் உடையவன்.

787. *துராரிஹா* - தீயவர்களை விலக்குபவன்; "கள்ள வேடத்தைக் கொண்டுபோய், புரம் புக்கவாறும்" - திருவாய். 5.10.4.

## சுலோகம் - 84

788. *சுபாங்க:* - அழகிய அங்கங்களை உடையவன்.

789. *லோக ஸாரங்க:* - உலகில் போக, மோக்ஷங்கள் ஆகிய இரண்டு மார்க்கங்களை உபதேசிப்பவன்.

790. *ஸுதந்து:* - யாரும் தப்பிக்க முடியாத வலையை உடையவன்.

791. *தந்துவர்த்தந:* - இழை(நூல்)களினால் ஆகிய ஸம்ஸாரம் என்னும் கயிற்றைப் பெருகச் செய்கிறவன்; "அகப்பட்டேன்... வாசுதேவன் வலையுளே" - திருவாய். 5.3.6.

792. *இந்த்ர கர்மா* - இந்திரனுக்காகச் செயல்புரிந்தவன்.

793. *மஹா கர்மா* - மஹத்தான செயல்களை உடையவன்.

794. *க்ருத கர்மா* - அசுரர்கள் ஏமாறப் பொய்யான செயல்களை உடையவன்; "கொடிய வினை செய்வேனும் யானே என்னும்" - திருவாய். 5.6.9.

795. *க்ருதாகம:* - ஆகம நூல்களைச் செய்தவன். (ஆகமம் - வேத சாஸ்திரம்)

## ஸ்லோகம் - 85

796. *உத்பவ:* - ஸம்ஸாரத்தைக் கடந்தவன்; "உறவு சுற்றம் என்று ஒன்று இலா ஒருவன்... பிறவியே கெடுப்பான்" - பெ.தி. 2.1.2.

797. *ஸுந்தர:* - அழகன்; "அழகனே" - பெ.ஆ.தி. 2.4.4.

798. *ஸுந்த:* - தன் வடிவழகினால் பிறர் மனங்களை உருகச் செய்பவன்.

799. *ரத்ந நாப:* - அழகான ரத்தினம் போன்ற கொப்பூழை உடையவன்.

800. *ஸுலோசந:* - அழகிய கண்களை உடையவன்.

801. *அர்க்க:* - வணங்கத் தக்கவன்; "வையம் எல்லாம் உடன் வணங்க, வணங்கா மன்னன்" - பெ.தி. 8.8.7. (வையம் - உலகம்)

802. *வாஜஸநி:* - அதிக உணவு உண்ண ஆதரிப்பவன்.

803. *ச்ருங்கீ* - மயில் பீலியைக் (கையில்) கொம்பாகக் கொண்டவன்.

804. *ஜயந்த:* - ஜயித்தவன்.

805. *ஸர்வ விஜ்ஜயீ* - சான்றோர்களையும் ஜயித்தவன்.

## ஸ்லோகம் - 86

806. *ஸுவர்ண பிந்து:* - சுவையான பேச்சாளன்.

807. *அக்ஷோப்ய:* - கலக்கம் இல்லாதவன்.

808. *ஸர்வ வாகீச்வரேச்வர:* - சொல் வேந்தன்.

809. *மஹா ஹ்ரத:* - பொல்லாதவர்க்கு மூழ்கும் தடாகமாகவும், நல்லார்க்கு நீராடும் தடாகமாகவும் உள்ளவன்; "வல்லரக்கர் புக்கு அழுந்த தயரதன் பெற்ற மரகத மணித் தடத்தினை" - திருவாய். 10.1.8. (தடம் - நீர் நிலை), "பொற்றாமரைக் கயம் நீராடப் போனாள்" - நெ.தா.19. (கயம் - தடாகம், குளம்)

810. *மஹா கர்த்த:* - படுகுழியாக இருப்பவன்; "நரகமும் யானே" - திருவாய். 5.6.10.

811. *மஹா பூத:* - சான்றோர்களை அடியார்களாக உடையவன்.

812. *மஹா நிதி:* - சான்றோர்களைப் பெரும் செல்வமாகக் கருதுபவன்.

## சுலோகம் - 87

★813. *குமுத:* - பூவுலகில் அடியார்களின் சேர்க்கையில் சந்தோஷிக்கிறவன்.

★814. *குந்தர:* - ஞானதேசிகன்.

★815. *குந்த:* - பாபம் மீண்டும் வராமல் செய்யும் ஞானம் ஊட்டுபவன்.

816. *பர்ஜந்ய:* - ஆத்யாமிகம் (தன்னைப் பற்றிவரும்), ஆதிபௌதிகம் (பஞ்ச பூதங்களாலும் பிற உயிரினங்களாலும் உண்டாகும்), ஆதிதைவிகம் (தெய்வத்தால் வரும்) என்ற மூவகைத் துன்பங்களையும் போக்கும் மேகமாக இருப்பவன்; "கார்முகில் உருவா" - பெ.தி. 7.9.9. (முகில் - மேகம்)

★817. *பாவந:* - தானே அடியார்களிடம் செல்பவன்; "உகந்து வந்து அடியேன் உட்புகுந்தான்" - திருவாய். 2.6.7.

818. *அநில:* - அருள்பாலிப்பதில் பிறர் தூண்டுதல் வேண்டாதவன்; "வெறிதே அருள் செய்வார், செய்வார்கட்கு உகந்து" - திருவாய். 8.7.8. (வெறிதே - எதிர்பார்ப்பு இன்றி)

819. *அம்ருதாம்ச:* - பக்தர்களுக்குத் தன் குணங்களாகிற அமிர்தத்தை ஊட்டுபவன்.

820. *அம்ருதவபு:* - அமுதம் போன்ற இனிய திருமேனியன்.

★821. *ஸர்வஜ்ஞ:* - முற்றும் உணர்ந்தவன்.

★822. *ஸர்வதோ முக:* - பல வழியாலும் அடியார்கள் தன்னை அடையும்படி இருப்பவன்.

## சுலோகம் - 88

★823. *ஸுலப:* - எளியவன்; "அணியன் ஆகும் தன தாள் அடைந்தார்க்கு எல்லாம்" - திருவாய். 9.10.8. (அணியன் - அருகில் உள்ளவன்; தாள் - திருவடி)

★824. *ஸுவ்ரத:* - அடைக்கலம் அளிப்பதையே விரதமாக உடையவன்; "சரணம் ஆகும் தனதாள் அடைந்தார்க்கு எல்லாம்" திருவாய். 9.10.5. (சரணம் - அடைக்கலம், புகலிடம்)

★825. *ஸித்த:* - தன்னை அடைய விரும்புவோருக்கு உபாயமாகவும் (வழி), உபேயமாகவும் (அடையும் பொருள்) இருப்பவன்.

826. *சத்ருஜித் சத்ருதாபந:* - பகைவரை வெல்லும் வீரனுக்கு மேலும் சக்தியைக் கொடுத்து, பகைவரை அழிப்பவன்.

827. *ந்யக்ரோதோதும்பர:* - தான் மிக உயர்ந்தவனாயினும் அடியார்களுக்குக் கட்டுப்பட்டவன்; "அடியோர்க்கு அணியனாய்" - பெ.தி. 5.7.9.

828. *அச்வத்த:* - நிலையற்ற அதிகாரம் உடைய இந்திராதி மூலம் உலகை ஆள்பவன்; "நாட்டினான் தெய்வம் எங்கும் நல்லது ஓர் அருள் தன்னாலே" - மாலை. 10.

829. *சாணூராந்த்ர நிஷூதந:* - சாணூரன் என்னும் மல்லனை அழித்தவன்; "அரங்கின் மல்லரைக் கொன்று" - திருவாய். 8.4.1.

## ஸ்லோகம் - 89

830. *ஸஹஸ்ரார்ச்சி:* (ஸஹஸ்ர + அர்ச்சி:) - ஆயிரக்கணக்கான கிரணங்கள் உடையவன்; "ஒளி மணிவண்ணன்" - திருவாய். 3.4.7.

831. *ஸப்த ஜிஹ்வ:* - ஏழு நாக்குகளை உடையவன் (அக்நி).

832. *ஸப்தைதா:* - (ஸப்த + இதா:) - ஏழு வகை மரக்குச்சிகளால் (ஸமித்து) வேள்வியில் சுடர்விடுபவன் (அரசு, அத்தி, பலாசு, வன்னி, விகங்கதம், அசநிகதம், புஷ்கரபர்ணம்); "வேள்வியும்... ஆனான்" - பெ.தி. 9.4.9.

833. *ஸப்த வாஹந:* - ஏழு வாகனங்களை உடையவன்; "புரவி ஏழ் பூண்ட தனி ஆழி தேர் ஆர் நிறை கதிரோன்" - சி.மடல் 2. (புரவி - குதிரை)

★ 834. *அமூர்த்தி:* - பஞ்சபூத சரீரத்தைவிட வேறு சரீரம் உடையவன்.

835. *அநக:* - பாவம் அற்றவன்; "தீது இல் சீர்த் திருவேங்கடத்தான்" - திருவாய். 3.3.5.

836. *அசிந்த்ய:* - எண்ணத்திற்கு அப்பாற்பட்டவன்; "நெஞ்சால் நினைப்பு அரிதால்" - விருத்தம். 98.

837. *பயக்ருத்* - அடியார் அல்லாதார்க்கு அச்சமூட்டுபவன்; "அசுரர்க்கு வெம் கூற்றமும் ஆய்" - திருவாய். 6.3.8.

838. *பயநாசந:* - அடியார் அச்சம் போக்குபவன்; "வன் சரண் சுரர்க்கு ஆய்" - திருவாய். 6.3.8. (வன் சரண் - வலிமையான புகலிடம்)

## சுலோகம் - 90

839. *அணு:* - மிகவும் நுட்பமானவன்; “நுண் நேர்மையன்” - பெ.தி. 5.4.9.

840. *ப்ருஹத்* - பெரிதிலும் பெரியவன்; “மிகப் பெரியன்” - பெ.தி. 5.4.9.

841. *க்ருச:* - பஞ்சினும் இலேசானவன்; “கோமள ஆயர் கொழுந்தே” - நா.தி. 3.8.

842. *ஸ்தூல:* - பேருருவன்; “ஓங்கி உலகு அளந்த உத்தமன்” - பாவை. 3.

843. *குணப்ருத்* - எல்லாவற்றையும் தன் குணம்போல் கருதித் தாங்குபவன்; “தன்னுள் கலவாதது எப்பொருளும் தான் இலையே” - திருவாய். 2.5.3.

844. *நிர்க்குண:* - குணங்களைக் கடந்தவன்.

845. *மஹாந்* - மிகவும் சிறந்தவன்.

846. *அத்ருத:* - ஒன்றிலும் கட்டுப்படாதவன்.

847. *ஸ்வத்ருத:* - தன்னைத் தானே தாங்குபவன்; “பொரு இல் உன் தனிநாயகம்” - திருவாய். 5.10.8. (பொரு - ஒப்பு)

848. *ஸ்வாஸ்ய:* - மேன்மையானவன்.

849. *ப்ராக்வம்ச:* - நித்யர்களுக்கு ஆதாரமாய் இருப்பவன்; “அமரர்கள் - தம் பெருமான்” - பெ.தி. 8.4.9. (நித்யர் - சம்சார பந்தம் இன்றி எப்போதும் எம்பெருமானுக்குத் தொண்டுபுரிபவர்கள்)

850. *வம்ச வர்த்தந:* - நித்யஸூரிகள் வம்சத்தை வளர்ப்பவன்.

## சுலோகம் - 91

851. *பாரப்ருத்* - உலகைக் காக்கும் பொறுப்பைச் சுமப்பவன்; “வேங்கடத்து உறைவார்க்கு நம என்னல் ஆம் கடமை அது சுமந்தார்கட்கே” - திருவாய். 3.3.6.

852. *கதித:* - வேதங்களால் புகழ்ந்து சொல்லப்பட்டவன்; “மறை ஆய நால் வேதத்துள் நின்ற மலர்ச் சுடரே!” - திருவாய். 3.1.10.

853. *யோகீ:* - அஸாதாரண சாமர்த்தியன்; “ஆலின் இலையாய்” - பாவை. 26. (ஆல இலையில் துயில்பவன்; யாவும் ஒடுங்கும் இடத்தன்)

854. *யோகீச:* - யோகிகளின் தலைவன்; "வானவர் எல்லாம் தொழுவார்" - திருவாய். 8.3.10.

855. *ஸர்வகாமத:* - இஷ்ட சித்தி அருள்பவன்.

856. *ஆச்ரம:* - இளைப்பாறும் இடமாக இருப்பவன்; "அவன் அடி நிழல் தடம் அன்றி " - திருவாய். 10.1.2.

857. *ச்ரமண:* - விட்டகுறை, தொட்டகுறையை நிறைவு செய்பவன்.

858. *க்ஷாம:* - திறமை உடையவர்களாகச் செய்பவன்.

859. *ஸுபர்ண:* - பிறவிக்கடலைத் தாண்ட உதவிபுரிபவன்; "புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே" - திருவாய். 2.8.1. (புணை - தெப்பம், ஓடம்)

860. *வாயுவாஹந:* - மேல் எழச் செய்பவன்.

## ஸ்லோகம் - 92

★861. *தநுர்த்தர:* - வில்லாளி; "சார்ங்கம் என்னும் வில் ஆண்டான்" - பல். 11. (திருக்குடந்தை - கும்பகோணம் திவ்யதேசப் பெருமாள் சாரங்கபாணி)

★862. *தநுர்வேத:* - வில்வித்தையை நிலைநாட்டியவன்.

★863. *தண்ட:* - (துஷ்டர்களைத்) தண்டிப்பவன்; "அசுரர் வாழ்நாள் மேல் தீ வாய் வாளி மழை பொழிந்த சிலையா!" - திருவாய். 6.10.4. (வாளி - அம்பு; சிலையா - வில் ஏந்தியவனே)

★864. *தமயிதா* - அவதரித்து அடக்குபவன்; "அரக்கரை நாடித் தடிந்திட்டு" - திருவாய். 7.5.2.

★865. *அதம:* - யாராலும் அடக்கப்படாதவன்.

★866. *அபராஜித:* - தனது கட்டளை எவ்விடத்திலும், எக்காலத்திலும், எதனாலும் தடைபடாதவன்.

867. *ஸர்வஸ:* - யாவரையும் தாங்குபவன்.

868. *நியந்தா:* - நியமித்து நடத்துபவன்.

869. *நியம:* - நிச்சயிப்பவன்.

870. *யம:* - தேவர்களை வழிநடத்துபவன்; "மார்க்கண்டேயன் - அவனை நக்கபிரானும் உய்யக்கொண்டது நாராயணன் அருளே" - திருவாய். 4.10.8. (நக்கன் - சிவன்)

## சுலோகம் - 93

★871. *ஸத்வவாந்* - ஸத்வ குணமாய் இருப்பவன்.

★872. *ஸாத்விக:* - ஸத்வ குணத்தின் பலன்களாக இருப்பவன்.

★873. *ஸத்ய:* - உண்மையாளன்; "மெய்யானை" - பெ.தி. 11.7.5. (திருமெய்ய திவ்யதேசப் பெருமாள் ஸத்யகிரிநாதன்)

★874. *ஸத்ய தர்ம பராயண:* - ஸத்ய தர்மங்களைச் செய்யும் உத்தமர்களை அங்கீகரிப்பவன்.

875. *அபிப்ராய:* - தர்மவான்களால் தானே பரம பயனாக நினைக்கப்படுபவன்; "விழுமிய முனிவர் விழுங்கும் கோது இல் இன் கனியை" - பெ.தி. 2.3.2. (விழுமிய - சிறந்த; கோது - குற்றம்)

876. *ப்ரியார்ஹ:* - அன்பிற்கு உரியவன்.

877. *அர்ஹ:* - அன்பு செய்யத் தகுந்தவன்; "உன்னை அருத்தித்து வந்தோம்" - பாவை. 25.

878. *ப்ரிய க்ருத்* - தன்னையே விரும்பும்படிச் செய்பவன்.

879. *ப்ரீதி வர்த்தந:* - தன் குண விசேஷங்களைக் காட்டி பக்தியை வளர்ப்பவன்; "மறப்பு அற, என் உள்ளே மன்னினான்" - திருவாய். 1.10.10. (மன்னினான் - நிலைத்திருந்தான்)

## சுலோகம் - 94

880. *விஹாயஸ கதி:* - பரமபதத்தை அடைய வழியாய் இருப்பவன்; "வான் ஏற வழி தந்த வாட்டாற்றான்" - திருவாய். 10.6.5. (பரமபதம் - வீடுபேறு, மோக்ஷம்)

881. *ஜ்யோதி:* - அர்ச்சிராதி மார்க்கத்தில் (பரமபதம் செல்லும் வழி) தானே முதற்படியாக ஒளிவீசுபவன்.

882. *ஸுருசி:* - பரமபத வழியில், இரண்டாவது படியாகிய பகலாகப் பிரகாசிப்பவன்.

883. *ஹுதபுக்விபு:* - பரமபத வழியில், மூன்றாம் படியாகிய வளர்பிறையாகத் திகழ்பவன்.

884. *ரவி:* - பரமபத வழியில், நான்காம் படியாகிய உத்ராயண சூரியனாக விளங்குபவன்.

885. *விரோசந:* - பரமபத வழியில், ஐந்தாம் படியாகிய உத்ராயண, தக்ஷிணாயன காலங்களில் ஆறாறு மாதங்களாக சஞ்சரிப்பவன்.

886. *ஸௌரீ:* - பரமபத வழியில், ஆறாவது படியாகிய வாயுலோகமாய் உள்ளவன்.

887. *ஸவிதா* - பரமபத வழியில், ஏழாவது படியாகிய மழையைப் பொழிவித்துப் பயிர் முதலியவற்றை வளர்க்கும் சூரியனாய் இருப்பவன்.

888. *ரவிலோசந:* - பரமபத வழியில், 8, 9, 10ஆம் படிகளாகிய முறையே (சூரிய கிரணங்களின் மூலம்) சந்திரன், மின்னல், வருணனாக விளங்குபவன்.

**சுலோகம் - 95**

889. *அநந்த ஹுதபுக் போக்தா* - பரமபத வழியில், 11ஆம் படியாகிய இந்திரனாகவும், 12ஆம் படியாகிய பிரமனாகவும் இருப்பவன்.

890. *ஸுகத:* - பரமபத வழியில், 13ஆம் படியாகிய அமாநவனாக இருப்பவன். (அமாநவன் தொடுவதால் ஸம்ஸார பந்தம் களையப்பட்டு சுகம் பெறப்படுகிறது).

891. *நைகத:* - பலவற்றைத் தருபவன். (பலவாறாக அலங்கரிக்கப்பெற்ற முக்தனை தேவமாதர்கள் அழைத்து வந்து பரமபதத்தில் சேர்க்கச் செய்பவன்)

892. *அக்ரஜ:* - பரமபதத்தில், முக்தன் தன்னை அனுபவித்து மகிழும்படியாக விளங்குபவன்.

893. *அநிர்விண்ண:* - (பக்தன் முக்தி அடைந்தபின்) கவலையற்று இருப்பவன்.

894. *ஸதாமர்ஷீ* - முக்தனுடைய சேவைகளை ஏற்பவன்; "உற்றேன்; உகந்து பணிசெய்து, உன் பாதம் பெற்றேன்" - திருவாய். 10.8.10.

895. *லோகாதிஷ்டாநம்* - உலகங்களுக்கு எல்லாம் ஆதாரமாக இருப்பவன்.

896. *அத்புத:* - ஆச்சரியப்படத்தக்கவன்; "அற்புதன் அனந்தசயனன்" - ச.வி. 65. (திருக்கடித்தான திவ்யதேசப் பெருமாள் அற்புத நாராயணன்)

**சுலோகம் - 96**

897. *ஸநாத்* - முக்தர்களால் அநுபவிக்கப்படுபவன்.

898. *ஸநாதந தம:* - பழமைக்குப் பழமையும், புதுமைக்குப் புதுமையும் ஆனவன்; "ஆண்டு ஊழி ஊழிதொறும் அப்பொழுதைக்கு அப்பொழுது என் ஆரா அமுதே" - திருவாய். 2.5.4. (ஊழி - யுகம்)

899. *கபில:* - பிரகாசிப்பவன்; "கோட்டிய வில்லொடு மின்னும் மேகக் குழாங்கள்" - திருவாய். 9.5.7.

900. *கபிரவ்யய:* (கபிர் + அவ்யய:) - நிலையான ஆனந்தத்தை அனுபவிப்பவன்.

901. *ஸ்வஸ்தித:* - (ஸ்வஸ்தி + த:) - மெய்ஞ்ஞானமாகிய மங்களத்தை அருள்பவன்; "உயர்வினையே தரும் ஒண்சுடர்" - திருவாய். 1.7.4. (உயர்வினையே - உயர்வையே)

902. *ஸ்வஸ்தி க்ருத்* - மெய்ஞ்ஞானத்தை உண்டாக்குபவன்.

903. *ஸ்வஸ்தி* - மங்கள மூர்த்தி.

904. *ஸ்வஸ்தி புக்* - மங்களம் காப்போன்.

905. *ஸ்வஸ்தி தக்ஷிண:* - மங்களத்தை தக்ஷிணையாகத் தருபவன். (குற்றேவல் புரிவோர்க்கு சரீரம், ஞானம், ஆரோக்யம் முதலான நன்மைகளை அளிப்பவன்) (குற்றேவல் - பணிவிடை)

சுலோகம் - 97

906. *அரௌத்ர:* - சௌமியன் (சாந்தன்).

907. *குண்டலீ* - மகர குண்டலங்களை (சுறாமீன் வடிவம்) காது அணிகளாக அணிந்தவன்; "மகர நெடுங்குழைக்காதன்" - திருவாய். 7.3.10 (திருப்பேரை திவ்யதேசப் பெருமாள் மகர நெடுங்குழைக்காதன்)

908. *சக்ரீ* - சுதர்சனம் என்னும் சக்ரம் தரித்தவன்; "எப்போதும் கை கழலா நேமியான்" - பெ.தி.அ. 87.

★909. *விக்ரமீ* - பராக்கிரமசாலி.

910. *ஊர்ஜித சாஸந:* - மீறக்கூடாத ஆணையை உடையவன். "ஆணை மெய் பெற நடாய தெய்வம் மூவரில் முதல்வன்" - ஆசிரியம். 3.

911. *சப்தாதிக:* - வேதவாக்குக்கும் எட்டாதவன்; "சொல் முடிவு காணேன்" - திருவாய். 2.5.8.

912. *சப்தஸஹ:* - அபயக்குரலை ஏற்பவன்; "கைம்மா துன்பம் கடிந்த பிரானே" - திருவாய். 2.9.1. (கைம்மா - யானை).

913. *சிசிர:* - விரைந்து துயர் துடைப்பவன்; "ஆனையின் துயரம் தீர புள்ஊர்ந்து, சென்று நின்று ஆழி தொட்டானை" - பெ.தி. 2.3.9. (புள் - கருடன்)

914. சர்வரீகர: - அழிக்கும் ஆயுதம் ஏந்தியவன்; "குனி சார்ங்கன், ஒண் சங்(கு) கதை வாள் ஆழியான் ஒருவன்" - திருவாய். 8.8.1. (குனி - வளைந்த; ஒண் - ஒளி பொருந்திய)

### ஸ்லோகம் - 98

915. *அக்ரூர:* - குரூரம் (கொடுமை) அற்றவன்.

916. *பேசல:* - அழகுக்கு அழகு சேர்க்கும் அழகன்.

917. *தக்ஷ:* - வேகம் உள்ளவன்.

918. *தக்ஷிண:* - கனிந்த இயல்புடையவன்.

919. *க்ஷமிணாம் வர:* - பொறுமையாளருள் சிறந்தவன்.

920. *வித்வத் தம:* - மஹா மேதை.

921. *வீதபய:* - (கஜேந்திரனது) பயத்தைப் போக்கியவன்.

922. *புண்ய ச்ரவண கீர்த்தந:* - பகவானின் சரிதையை (கஜேந்திர மோக்ஷ சரிதம்) சொல்வதனாலும், கேட்பதனாலும் பக்தன் புனிதன் ஆகும்படி இருப்பவன்.

### ஸ்லோகம் - 99

923. *உத்தாரண:* - கரையேற்றுபவன்; "கம்ப மா கரி கோள் விடுத்தானே" - பெ.ஆ.தி. 5.1.9. (கம்பம் - நடுக்கம் தரும்; கரி - யானை; கோள்-துன்பம்)

924. *துஷ் க்ருதிஹா* - தீங்கு செய்வோரை அழிப்பவன்; "வேழம் மூவாமை நல்கி முதலை துணித்தானை" - பெ.தி. 6.8.3. (மூவாமை-இறந்துபடாதபடி; வேழம்-யானை)

925. *புண்ய:* - பாவங்களைப் போக்குபவன்; "வந்து, உன் அடியேன் மனம் புகுந்த அப் புலவ! புண்ணியனே!" - பெ.தி. 3.5.7.

926. *துஸ் ஸ்வப்ந நாசந:* - கெட்ட கனவுகளைப் போக்குபவன்.

927. *வீரஹா* - பாசத்திலிருந்து விடுவிப்பவன்.

928. *ரக்ஷண:* - காப்பாற்றுபவன்.

929. *ஸந்த:* - முன்னேறச் செய்பவன்.

930. *ஜீவந:* - உயிர் அளிப்பவன்.

931. *பர்யவஸ்தித:* - பக்கத்தில் இருப்பவன்.

### சுலோகம் - 100

932. *அநந்த ரூப:* - எண்ணற்ற வடிவங்களைக் கொள்பவன்.

933. *அநந்த ஶ்ரீ:* - அளவிலாச் செல்வம் உடையவன்; "செல்வர் பெரியர்" - நா.தி. 10.10.

934. *ஜிதமந்யு:* - கோபத்தை வென்றவன்.

935. *பயாபஹ:* - சார்ந்தவர்களின் பயத்தை நீக்குபவன்.

936. *சதுரச்ர:* - பக்தர்களின் வேண்டுகோள்களைப் பழுதில்லாமல் நிறைவேற்ற வல்லவன்.

937. *கபீராத்மா* - ஆழம் காணமுடியாதவன்; "எம்பெருமான் தன்மையை யார் அறிகிற்பார்" - திருவாய். 8.3.9.

938. *விதிச:* - யாவருக்கும் மேலோன்; "ஞாலம் உண்டவனை ஆமோ தரம் அரிய ஒருவர்க்கு" - திருவாய். 2.7.2. (ஆமோ - இயலுமோ)

939. *வ்யாதிச:* - பதவிகளைத் தருபவன்.

940. *திச:* - ஆதிக்கம் செலுத்துபவன்.

### சுலோகம் - 101

941. *அநாதி:* - தொடக்கம் இல்லாதவன்.

942. *பூர் புவ:* - அடியார்களுக்கு புகலிடம் ஆனவன்; "உன்னைக் கொண்டு என்னுள் வைத்தேன்; என்னையும் உன்னில் இட்டேன்" - பெ.ஆ.தி. 5.4.5.

★943. *லக்ஷ்மீ:* - அண்டியவர்களுக்கு சகல சம்பத்தாக உள்ளவன்.

944. *ஸுவீர:* - சிறந்த சக்தி வாய்ந்தவன்.

945. *ருசிராங்கத:* - தன் அழகிய திருமேனியைப் பக்தர்கள் கண்டு களிக்கத் தருபவன்.

946. *ஜநந:* - பிறப்பிப்பவன்.

947. *ஜநஜந்மாதி:* - பிறவிப் பயனாக உள்ளவன்.

★948. *பீம:* - பயங்கரன்.

949. *பீம பராக்கிரம:* - பயங்கரமான வல்லமை உடையவன்.

### சுலோகம் - 102

950. *ஆதார நிலய:* - எல்லாவற்றுக்கும் அடித்தளமாய் இருப்பவன்.

951. *தாதா* - தர்ம உபதேசி.

952. *புஷ்பஹாஸ:* - நாள் மலர் (அன்று மலர்ந்த பூ) போல் இனியவன்; "கருவிளை ஒண் மலர்காள்! காயா மலர்காள்! திருமால் உரு-ஒளி காட்டுகின்றீர்" - நா.தி. 9.3. (ஒண் - பிரகாசம்)

953. *ப்ரஜாகர:* - பக்தர்களுக்காகக் கண் உறங்காமல் இருப்பவன்.

954. *ஊர்த்வக:* - மிக உன்னதமானவன்; "கருத்தின்கண் பெரியன்" - திருவாய். 10.8.8.

★955. *ஸத்பதாசார:* - நல்வழியில் தொண்டாற்றச் செய்பவன்.

956. *ப்ராணத:* - ஆன்ம ஞானம் அளிப்பவன்.

957. *ப்ரணவ:* - ஓங்கார சொரூபன்.

958. *பண:* - பண்டமாற்று செய்பவன் (தான் எஜமான் ஆகவும் பக்தர்கள் தனக்கு தாஸர்களாகவும் இருக்கும் சம்பந்தத்தைச் சில சமயங்களில், தான் பக்தர்களுக்கு அடிமையாகவும் பக்தர்கள் தனக்கு எஜமானனாகவும் இருக்கும்படிச் செய்பவன்).

## சுலோகம் - 103

959. *ப்ரமாணம்* - விதி (சட்டம், ஒழுக்கமுறை, காலம், அறிவு, உண்மை)யாய் இருப்பவன்.

960. *ப்ராண நிலய:* - எல்லா உயிரினங்களுக்கும் இருப்பிடமானவன்; "சாலப் பல நாள் உகம் தோறு, உயிர்கள் காப்பானே" - திருவாய். 6.9.3.

961. *ப்ராண ப்ருத்* - ஜீவராசிகளைத் தாங்குபவன்; "உயிர்க்கு எல்லாம் தாய் ஆய்" - பெ.தி. 7.1.9.

962. *ப்ராண ஜீவந:* - உணவாக உயிரினங்களை வாழ்விப்பவன்; "உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் எம்பெருமான்" - திருவாய். 6.7.1.

963. *தத்வம்* - பிரபஞ்சத்தில் தானே சாராம்சமாக இருப்பவன்; "கடலினுள் அமுதே! அமுதில் பிறந்த இன்சுவையே! சுவையது பயனே" - திருவாய். 8.1.7.

964. *தத்வவித்* - உண்மையை அறிந்தவன்.

965. *ஏகாத்மா* - எவ்வுயிர்க்கும் உயிராய் இருப்பவன்; "ஓர் உயிரேயோ உலகங்கட்கு எல்லாம்" - திருவாய். 8.1.5.

966. *ஜந்ம ம்ருத்யு ஜராதிக:* - பிறப்பு, இறப்பு, மூப்புகளைக் கடந்தவன்; "பிறப்பொடு மூப்பு ஒன்று இல்லவன்" - பெ.தி. 4.3.2.

## சுலோகம் - 104

967. *பூர் புவஸ் வஸ்தரு:* - மூவுலக ஜீவராசிகளுக்கும் பெரிய மரம் போன்று தங்கும் இடமாய் இருப்பவன்.

968. *தார:* - ஸம்ஸாரக் கடலைக் கடக்குவிக்கும் நாவாயாக (கப்பலாக) இருப்பவன்; "அறுக்கும் வினையாயின... திருநாவாய்" - திருவாய். 9.8.1. (திருநாவாய் என்னும் திவ்ய தேசமாக இருப்பவன்; இத்தலமும் ஸம்ஸாரக் கடல் கடக்க உபாயமாகிறது)

969. *ஸவிதா* - எல்லாவற்றையும் உண்டாக்குபவன்.

970. *ப்ரபிதாமஹ:* - பகவானாக இருப்பவன் [1. பகவாந், 2. பிரமன் (படைப்போன்), 3. பிரஜாபதி-ரிஷி (வம்ச விருத்தி செய்பவன்), 4. பிரஜைகள் (மக்கள்)]. பிராஜாபதி ரிஷி கோத்திரதாரியாகிறான். ஸ்ரீவத்ஸ, கௌதம, கௌண்டில்ய, ஆத்ரேய முதலான கோத்திரதாரிகள்.

★971. *யஜ்ஞ:* - வேள்வியாய் இருப்பவன்; "வேள்வியும்... தான் ஆய் நின்ற எம்பெருமான்" - பெ.தி. 5.7.1. (வேள்வி - யாகம்)

★972. *யஜ்ஞபதி:* - யஜ்ஞ பலன் அளிப்பவன்.

★973. *யஜ்வா* - யாகம் செய்பவனாய் உள்ளவன்.

★974. *யஜ்ஞாங்க:* - யாகம் செய்பவர்க்குத் துணையாய் இருப்பவன்.

★975. *யஜ்ஞ வாஹந:* - யாகத்தை நடத்தித் தருபவன்.

## சுலோகம் - 105

★976. *யஜ்ஞப்ருத்* - யாகங்களைக் குறைவின்றி நிறைவு செய்பவன்.

★977. *யஜ்ஞக்ருத்* - உலகங்களின் நலனுக்காக ஆதியில் யாகங்களைப் படைத்தவன்.

★978. *யஜ்ஞீ* - யாகங்களால் ஆராதிக்கப்படுபவன்.

★979. *யஜ்ஞபுக்* - யாகங்களை அனுபவிப்பவன்; "செய்கைப் பயன் உண்பேனும் யானே என்னும்" - திருவாய். 5.6.4.

★980. *யஜ்ஞஸாதந:* - தன்னை அடைவதற்கு யாகங்களை உபாயங்கள் (வழி) ஆகும்படிச் செய்பவன்.

★981. *யஜ்ஞாந்தக்ருத்* - யாகத்தின் பலனான தத்வஞானத்தை (எம்பெருமானைப் பற்றிய உண்மை அறிவு) உண்டாக்குபவன்.

★982. *யஜ்ஞகுஹ்யம்* - யாகத்தின் ரகசியமாய் இருப்பவன்.

983. *அந்நம்* - அனுபவிக்கத்தக்க அறுசுவை அமுதாக (உணவு) உள்ளவன்; "தேனும், பாலும், கன்னலும், அமுதும் ஆகித் தித்தித்து, என் ஊனில், உயிரில், உணர்வில் நின்ற ஒன்றை" - திருவாய். 8.8.4. (ஊன் - உடம்பு)

984. *அந்நாத:* - தன்னை அந்நமாக (உணவு) அனுபவிக்க விழையும் பக்தர்களைத் தனக்கு அந்நமாக்கி இனிது அநுபவிப்பவன்; "வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணில் என்று ஆர்வு உற்ற என்னை ஒழிய, என்னில் முன்னம் பாரித்துத் தான் என்னை முற்றப் பருகினான்" - திருவாய். 9.6.10. (பாரித்தல் - பரபரப்பு அடைதல், மனத்தில் பெருக நினைத்தல், முயற்சி செய்தல்)

**ஸ்லோகம் - 106**

985. *ஆத்ம யோநி:* - பக்தர்களை தன்னுள் சேர்ப்பவன்; "தானும் யானும் எல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம்" - திருவாய். 2.3.1.

986. *ஸ்வயம்ஜாத:* - தனது சங்கல்பத்தினால் (இச்சை) தானே அவதரிப்பவன்; "மண்ணின் பாரம் நீக்குதற்கே, வடமதுரை பிறந்தான்" - திருவாய். 9.1.10.

987. *வைகாந:* - அடியாரது துயர்களை வேர் அறக் களைபவன்; "அடியார் அல்லல் தவிர்த்த" - திருவாய். 8.3.5.

988. *ஸாம காயந:* - முக்தர்கள் தன் முன்னால் ஸாமகானம் செய்யக் கேட்பவன்.

989. *தேவகீ நந்தந:* - தேவகியின் மைந்தன்; "தேவகியின் வயிற்றில்... தோன்றிய அச்யுதன்" - பெ.ஆ.தி. 1.2.6.

990. *ஸ்ரஷ்டா:* - உலகங்களைப் படைப்பவன்; "கடல்ஞாலம் செய்தேனும் யானே என்னும்" - திருவாய். 5.6.1. (கடல்ஞாலம் - கடல் சூழ்ந்த உலகு)

991. *க்ஷிதீச:* - பூமிக்கு ஈசுவரன்; "உலகம் மூன்று உடை அண்ணலே" - திருவாய். 7.1.1.

★992. *பாப நாசந:* - பாபங்களைப் போக்குபவன்; "பாவநாச நாதனே" - ச.வி. 27.

## சுலோகம் - 107

993. *சங்க ப்ருத்* - பாஞ்சசன்னியம் என்னும் வெண்மையான சங்கை இடக்கையில் தரித்தவன்; "வெண்சங்கு ஏந்தி" - திருவாய். 6.9.1.

994. *நந்தகீ* - நந்தகம் என்னும் வாளை உடையவன்; "நாந்தகம் ஏந்திய நம்பி" - பெ.ஆ.தி. 1.9.4.

995. *சக்ரீ* - சுதர்சனம் என்னும் சக்ரத்தை வலக்கையில் ஏந்தியவன்; "ஒண்சுடர் ஆழியே" - பெ.ஆ.தி. 5.2.9. (திருக்குடந்தை - கும்பகோணத்தில் சக்ரபாணி கோயில் உள்ளது)

996. *சார்ங்க தந்வா* - சார்ங்கம் என்னும் வில்லை ஏந்தியவன்; "அழகிய சார்ங்கமே" - பெ.ஆ.தி. 5.2.9. (திருக்குடந்தை - கும்பகோண திவ்யதேசப் பெருமாள் சார்ங்கபாணி)

997. *கதா தர:* - கௌமோதகீ என்னும் கதையைக் கொண்டவன்; "தண்டே" - பெ.ஆ.தி. 5.2.9.

998. *ரதாங்க பாணி:* - தேரின் ஓர் அங்கமாகிய சக்கரத்தை ஓர் ஆயுதமாகக் கையில் வைத்திருப்பவன்.

999. *அக்ஷோப்ய:* - அசைக்க முடியாதவன்; "திருவரங்கச் செல்வனார் பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே" - நா.தி. 11.8.

1000. *ஸர்வ ப்ரஹரணாயுத:* - எல்லாத் துன்பங்களையும் நீக்கும் திவ்ய ஆயுதங்கள் உடையவன்; "சங்கொடு சக்கரம், வில், ஒண்மை உடைய உலக்கை, ஒள் வாள், தண்டு கொண்டு... நன்மை உடையவன்". - திருவாய். 3.10.1.



## V. நாம அகராதி ( 1 - 1000 )



★ - வரிசை எண்.

## ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்துக்கு பாஷ்யம் எழுதிய மஹான்கள்


ஸ்ரீ ஆதிசங்கரர்


ஸ்ரீ பராசர பட்டர்


ஸ்ரீ ராகவேந்திரர்